# கல்கி

KALKI 28.5.95 ரூ. 3.00





# சின்முத்ரா

உங்கள் முதலீட்டிற்கு பூரண பாதுகாப்பை அளிக்கும் ஒப்பற்ற நிதி நிறுவனம்

| உங்கள் முதலீட்டிற்கு | எங்களது சிறப்பு அம்சங்கள் |
|---|---|
| **24%** வருட வட்டியை வழங்குகிறது. | • குறைந்த பட்ச முதலீடு ரூ.3,000/-<br>• டெபாசிட் செய்வோருக்கு 3% ஊக்கத் தொகை<br>• அறிமுகப்படுத்துவோருக்கு 1% ஊக்கத் தொகை<br>• முதிர்வடையும்போது - 2% சிறப்பு ஊக்கத் தொகை<br>பொது மக்களின் வேண்டு கோளுக்கிணங்க மேலே கூறப்பட்டுள்ள ஊக்கத் தொகை 30.06.95 வரை நீட்டிக்கப்பட்டுளளது. |

**வட்டிக்கான பின்தேதியிட்ட காசோலைகள் முன்னதாக வழங்கப்படும்**

| சின்முத்ராவின் 'பத்ம நிதி' | 'பத்ம நிதி' வைப்பு நிதி பத்திரத்தில் முதலீடு செய்யுங்கள் ! |
|---|---|

பத்ம நிதி வைப்பு நிதி பத்திரம்

உங்கள் முதலீடு ரூ.10,000/-

காலம் 36 மாதங்கள்

திரும்பப்பெறும் தொகை ரூ.20,000/-

| சின்முத்ராவின் 'சிட்டுக் குருவி' | சின்முத்ராவின் 'சிட்டுக்குருவி' சேமிப்புத் திட்டத்தில் சேர்ந்து பயனடைவீர் ! |
|---|---|

| திட்டம் | I | II | III | IV | காலம் 24 மாதங்கள் மட்டுமே ! |
|---|---|---|---|---|---|
| பிரதி மாதம் கட்டவேண்டிய தொகை | ரூ.50/- | ரூ.100/- | ரூ.200/- | ரூ.300/- | |
| திரும்பப்பெறும் தொகை | ரூ.1450/- | ரூ.2900/- | ரூ.5800/- | ரூ.8700/- | |



சின்முத்ரா ஃபைனான்ஸ் அண்டு இன்வெஸ்ட்மெண்ட்ஸ்

112, முதல் மாடி, இராமகிருஷ்ணா மடம் சாலை,
(இராணி மெய்யம்மை உயர்நிலைப்பள்ளி எதிரில்)
மந்தவெளி, சென்னை - 600 028.
தொலைபேசி : 4937040




**சின்முத்ரா - உங்கள் வளர்ச்சிக்கான பாதை !**

# பொது சிவில் சட்டம்:



**முதல் மனைவி இருக்கும்போது, இரண்டாவது திருமணம் செய்து கொள்வதற்காகவே முஸ்லிமாக மதம் மாறிய ஒரு கணவன் பற்றிய வழக்கில், சுப்ரீம் கோர்ட் வழங்கிய தீர்ப்பில், 'அனைவருக்கும் பொதுவான சிவில் சட்டம் பற்றி யோசிக்கலாம்' என்ற உரத்த சிந்தனையைக் கிளப்பியிருக்கிறது. இதுபற்றி முஸ்லிம்கள் என்ன நினைக்கிறார்கள்? முன்னாள் சட்டமன்ற உறுப்பினர் எம். ஏ. லத்தீப்பைச் சந்தித்துக் கேட்டோம்....**

**"சிவில் சட்டங்கள் என்றால் என்ன?"**

"அவரவர் மதத்தின் அடிப்படையில் அமைக்கப்பட்டிருப்பதுதான் சிவில் சட்டங்கள். ஒரு மனிதனுடைய பிறப்பு, திருமணம், இறப்பு, இறப்புக்குப் பின்னர் உள்ள மறுமை நிலை ஆகியவை, ஒவ்வொரு மனிதனும் சார்ந்துள்ள மதத்தின் அடிப்படையிலும், அது காட்டியுள்ள நெறிகளுக்கேற்பவும் நடைபெறுகிறது. 'இப்படி நடந்தால்தான் நீ ஹிந்து', 'இப்படி வாழ்ந்தால்தான் நீ முஸ்லிம்' என்று நெறிமுறைகள் சொல்கின்றன. இதற்கு விதி விலக்காகப் பலர் வாழலாம். ஆனால் பெரும்பாலான மக்கள், அவரவர் மதத்தின் அடிப்படையில்தான் வாழ்க்கைப் பாதையை அமைத்துக் கொள்கின்றனர். அவர்களைக் கட்டுப்படுத்துவது அந்தந்த மதத்துக்காக வைக்கப்பட்டிருக்கும் சிவில் சட்டங்கள். சமுதாயப் பழக்க வழக்கங்களை நிர்ணயிக்கும் நெறிமுறைகளாக சிவில் சட்டங்களைச் சொல்லலாம். ஹிந்து, முஸ்லிம் ஆகிய மதங்களைச் சேர்ந்தவர்களைத் தவிர, புத்த மதம், பார்ஸி, சீக்கியர்கள் ஆகியோருக்கும் தனிச் சட்டங்கள் இருக்கின்றன."

**"பொதுவான சிவில் சட்டம் பற்றி அனைவரும் யோசிக்க வேண்டும் என்று சுப்ரீம் கோர்ட் தெரிவித்திருப்பது பற்றி உங்கள் கருத்தென்ன? முஸ்லிம்கள் இதை எதிர்க்கிறார்களா?"**

"சட்ட அமைப்புக்குள் வைத்து வாதிடக் கூடியது அல்ல நமது வாழ்க்கைப் பாதை. அதற்கு அப்பாற்பட்டு, ஒருவன் சார்ந்துள்ள சமய பழக்க வழக்கங்களும், ஏற்படுத்தப்பட்டுள்ள மரபுகளும்தான் வாழ்க்கையை நிர்ணயிக்கின்றன. மனிதனுக்கு மனிதன், அவன் சார்ந்துள்ள மதத்தின் அடிப்படையில் இது மாறுபடுகிறது. தனி மனிதனுக்கு வழிகாட்டுபவை மதநெறிகள். ஆக, பல்வேறு மதங்களைச் சேர்ந்தவர்களின் இப்போதைய நம்பிக்கைகளையெல்லாம் தகர்த்தெறிந்தால்தான், நாடு முழுவதும் பொதுவானதொரு நிலையைக் கொண்டுவர முடியும். 'முஸ்லிம்கள் ஏற்றுக் கொள்கிறார்களா?' என்பது மட்டுமல்ல விவகாரம்! மற்ற மதத்தினரும் தாங்கள் இப்போது ஏற்றுக் கொண்டுள்ள சட்டத்தை விட்டுவிட்டு, பொதுவான சட்டத்துக்கு வரவேண்டும். இது சாத்தியமா? நாராயணனைத் துதித்தால் வைகுண்டம் போகலாம் என்பது வைணவரின் வாழ்க்கைப் பாதை! ஆனால் சைவர் போக விரும்புவது கைலாயம். யானைக்கு எந்த சம்பிரதாய நாமம் போடுவது என்பதில் சிக்கல். இதை நான் கிண்டலுக்காகவோ அல்லது விமர்சனப் பார்வையாகவோ சொல்லவில்லை. விஷயம் என்னவென்றால் ஒரு மதத்துக்குள்ளேயே பல்வேறு நம்பிக்கைகள், வாழ்க்கை நெறிமுறைகள் இருக்க, அனைத்து மதங்களைச் சார்ந்த விஷயங்களையும் உள்ளடக்கிய பொதுவான சிவில் சட்டம் சாத்தியம்தானா? பா. ஜ. க. மேடையில் பேசுவது அரசியல். அதை விட்டு விடுங்கள். மதவாதிகளின் கருத்தென்ன?

"அரசியலமைப்புச் சட்டம் 44 இல் வழிகாட்டுதல் நெறியாகத்தான் பொது சிவில் சட்டத்தைப் பற்றிச் சொல்லப்பட்டுள்ளது. அதே பிரிவில், நாடு முழுவதும் மதுவிலக்கு, பஞ்சாயத்து ராஜ் ஆகியவற்றைப் பற்றியும் சொல்லப்பட்டிருக்கிறதே! அதை நிறைவேற்றப் பாடுபட





லாம் அரசு. மேலும், அரசியல் சட்டம் 21-லிருந்து 31 வரை, தனி மனிதனுக்குள்ள வாழும் உரிமை, சொத்து உரிமை, விரும்புகிற மதத்தைப் பேணுகிற உரிமை சொல்லப்பட்டுள்ளன. இந்த நிலையில் விதி 44-இன் கீழ் பொதுவான சட்டத்தை எப்படிக் கொண்டுவர முடியும்? அனைத்து மதங்களையும் சமமாகப் பாவித்துக் காப்பாற்றுவதுதான் நமது மதச் சார்பற்ற தன்மை. தங்கள் மதத்தின் அடிப்படைகளைப் பின்பற்றுவோரின் நம்பிக்கைகளைப் பொதுவான சிவில் சட்டம் உடைத்தெறிந்துவிடும்!''

**''பலதார மணம், கலபமான விவாகரத்து போன்றவற்றுக்கு இஸ்லாம் மார்க்கத்தில் வழி இருப்பதால்தான் தங்களுக்கென்று இருக்கும் தனிச் சட்டத்தை விடுவதற்கு அவர்கள் எதிர்ப்புத் தெரிவிக்கிறார்களோ என்கிற சந்தேகமும் இருக்கிறது...''**

''இந்த அபிப்பிராயமே தவறு. முஸ்லிம்களின் வாழ்க்கை ஷரியத்தை அடிப்படையாகக் கொண்டது. குரானிலிருந்தும், நபிகளின் அருளுரைகளிலிருந்தும், மார்க்க அறிஞர்களின் தீர்ப்புகளிலிருந்தும் உருவாக்கப்பட்டதுதான் ஷரியத். இதை அடிப்படையாகக் கொண்டது முஸ்லிம் தனிச் சட்டம். ஒருவன் முஸ்லிமாக வாழ்ந்து, இறக்க வேண்டுமானால் ஷரியத்தைப் பின்பற்றுபவனாக இருக்க வேண்டும். இஸ்லாத்தில் கலபமாக 'தலாக்' சொல்லி மனைவியை விவாகரத்து செய்ய முடியாது. தலாக் சொன்னபின், பெண்ணுக்கு மூன்று மாதவிலக்குகள் வரை பொறுத்துப் பார்த்து - கரு உண்டாகவில்லை என்று தெரிந்த பின்னரே விவாகரத்து கிடைக்கும். விவாகரத்துக்குப் பின் 'மகர்' பணத்தைக் கொடுத்துவிட்டுப் பெண்ணுக்கு ஜீவனாம்சம் கொடுக்காததற்குக் காரணம், தொடர்ந்து அந்தப் பெண், பழைய கணவனைச் சார்ந்துள்ள நிலையை ஒழிக்கத்தான்! மணமுறிவுக்குப் பிறகு, தான் விரும்பிய பாதையைத் தேர்ந்தெடுக்க பெண்ணுக்குச் சுதந்திரம் உண்டு. விதவை மறுமணத்தை அங்கீகரிக்கிறது இஸ்லாம். மனைவியும் கணவனை விவாகரத்து செய்யலாம். இதைக் 'குலா' என்று சொல்வார்கள். முஸ்லிம் மதத்தில் ஒருவனுக்குள்ள தலையாய உரிமை தன் தந்தை யார் என்று அறிந்து கொள்வதுதான். அதனால் சின்னவீடு சமாசாரங்கள் கிடையாது. 1981 ஆம் ஆண்டு சென்ஸஸின்போது முஸ்லிம்களைவிட மற்ற மதத்தினரிடையேதான் பலதார மணம் அதிகமாக இருக்கிறது என்று அறியப்பட்டது.''

**''முஸ்லிம்கள் பொதுவான கிரிமினல் சட்டத்தை ஏற்றுக் கொண்டுள்ளார்கள். அதற்கும் முஸ்லிம் கிரிமினல் சட்டத்தை நாட வேண்டியதுதானே? ஆனால் அதன்படி தண்டனைகள் மிகவும் கொடுமையானவை என்பதால் மற்றவர்களுக்கும் பொருந்தக் கூடிய கிரிமினல் சட்டத்தை ஏற்றுக் கொண்டுள்ளார்கள் என்று சொல்லப்படுவது பற்றி...?''**

''சிவில் சட்டம் என்பது, ஒரு மதத்தினருக்காக அதன் நெறிகளுக்கேற்ப வாழ்க்கைப் பாதையை அமைத்துக் கொள்ள வைக்கப்பட்டிருக்கிறது. ஆனால் கிரிமினல் செயல்கள் அப்படியல்ல! முஸ்லிமாக இருப்பவர் கொலை, கொள்ளைகளில் ஈடுபடும்போது முஸ்லிம் சமுதாயத்தில் உள்ளவர்களிடம் மட்டும்தான் செய்கிறானா? ஹிந்துவும் அப்படித்தான் செய்கிறானா? கிரிமினல் நடவடிக்கைகளுக்கு மதக் கோட்பாடுகள் கிடையாது. எனவேதான் அனைத்து மக்களும் பொதுவான கிரிமினல் சட்டத்தை எந்தவித எதிர்ப்புமின்றி ஏற்றுக் கொண்டுள்ளார்கள்.''

**முஸ்லிம்கள் மட்டுமே கவலைப்பட வேண்டிய விஷயமல்ல!**

பேட்டி : **ப்ரியன்**



# பேரன் செய்வது, தாத்தா சொன்னது!

**கா**லை ஏழு மணி. சென்னை, தி.நகரில் சாரதா வித்யாலயா பள்ளியை அடுத்து கிரிபித்ரோடு. பதிமூன்றாம் எண் வீட்டின் முன்பு ஆறு நாய்கள் காத்துக் கொண்டிருக் கின்றன. அந்த வீட்டுக்காரரான ரவிச்சந்திரன் (வயது அறுபது) கையில் ஒரு பையுடன் வீட்டை விட்டு வெளியே வந்ததும், நாய் களின் கண்களில் நூறு வாட்ஸ் பல்ப்.

ரவிச்சந்திரன், பையிலிருந்து பிரெட் பாக்கெட்டுகளை எடுத்து, பிய்த்து ஒவ்வொரு நாய்க்கும்போட, அவை கவ்விப் பிடித்துச் சாப்பிடு கின்றன. ஒன்றிரண்டு நாட்களில்லை. இதுபோல பத்து வருடங்களாக, நாய்களுக்குத் தின மும் காலை பிரெட் கொடுத்து வருகிறார் இவர்.

"பத்து வருடங் களுக்கு முன், என் வீட்டுக்கு எதிரே ஒரு நாய் சாகக் கிடந்தது. அதற்கு உணவு கொடுத்தேன். பிழைத் துக் கொண்டது. அதன் பின் தினம் அதற்கு பிரெட் போட ஆரம்பித் தேன். இதைப் பார்த்து விட்டு எங்கள் தெருவில் உள்ள அத்தனை நாய்களும் காலையில் என் வீட்டுக்கு வரத் துவங்கிவிட்டன. அந்தப் பழக்கம்தான் இன்றும் தொடர்கிறது!" என்கிறார் ரவிச்சந்திரன்.

நாய்களுக்காக இவர் மாதம் அறுநூறு ரூபாய் வரை செலவழிக்கிறார். ஆனாலும் அதை இவர் வீண் செலவாக நினைக்கவில்லை. அதற்குக் காரணம் இவரது தாத்தாவாகக் கூட இருக்கலாம்!

ஆம்! 'வாலைக் குழைத்து வரும் நாய் தான்–அது மனிதருக்குத் தோழனடி பாப்பா' என்று பாடிய மகாகவி பாரதியார் தான் ரவிசந்திரனின் தாத்தா!

– எஸ். சந்திரமௌலி

படம் : காமெரா திருஞானம்

வாசகர் யோசனை:

கடலூர் இரா. இராஜேந்திரன்



"பொண்ணுக்கு நகை நட்டு எவ்வளவு போடுவீங்க?"

"நகை ஒரு அஞ்சு பவுனும், நட்டு ஒரு பத்து கிலோவும் கொடுக்கிறோம்!"

- த. முகிலன்



"என்னங்க, 'பிள்ளையார் பிடிக்கப் போய்க் குரங் காய் முடிஞ்சது'ன்னு சொல்றாங்களே, அப்படின்னா என்ன?"

"உங்க அக்காவைப் பெண் பார்க்க வந்திட்டு, உன் னைக் கட்டிக்கிறேன்னு சொன்னேனே, அதான்!"

- டி. என். பாலகிருஷ்ணன்

**மே** பதினைந்தாம் தேதி, திங்கட்கிழமை, காலை பத்து மணி. அடையாறு ராம்கே ஏஜென்ஸி (டி.வி.எஸ். டீலர்) ஜொலிக்க ஆரம்பித்தது. வெயிலால் மட்டுமல்ல.... மிகவும் எளிமையாக நடந்த கல்கி-டி.வி.எஸ் சுஸுகி இணைந்து வழங்கிய மோட்டார் சைக்கிள் பரிசளிப்பு நிகழ்ச்சியாலும் கூட!

பத்தொன்பது சரியான விடைகள் எழுதி டிவிஎஸ் சுஸுகி பரிசு பெற்ற கொங்கணாபுரம் வே. செந்தில்குமார் முகமெல்லாம் நட்சத்திரங்கள் ஜொலிக்க, சேலத்திலிருந்து அதிகாலையிலேயே வந்துவிட்டிருந்தார்.

"இது எனக்கு ஃபர்ஸ்ட் கிளாஸ் டைம் சார்! பரிசு கிடைச்சிருக்குன்னு உங்க தந்தி வந்த சமயம் எனக்கு வேற ரெண்டு சந்தோஷ சம்பவங்கள் அடுத்தடுத்து நடந்தது.... எனக்குப் பெண் குழந்தை பிறந்தது.... இந்த வார குமுதத்துல என் கதை வேற வந்திருக்கு!"

ஊரில் பள்ளி ஆசிரியராகப் பணிபுரியும் செந்தில்குமார், "இருபத்தியாறு வாரங்கள் போட்டி விடைகள் எழுதறது கஷ்டமா இல்லை. கூப்பன்கள் தொலையாமல் சேகரித்து வைப்பதுதான் ரொம்பக் கஷ்டமா இருந்தது!" என்றார்.

"கோலம் போடும் பெண்ணின் பெயரைக் கண்டுபிடிப்பதற்குள் (போட்டி - 14) தாவு தீர்ந்துவிட்டது!"

**ப**ரிசளிக்க யாரைக் கூப்பிடலாம்?

யோசிக்க ஆரம்பித்ததும் சட்டென்று நம் ஞாபகத்துக்கு வந்தவர் வைரமுத்து. தொலைபேசியில் கேட்டதும் உடனே ஒப்புக் கொண்டு சரியாகப் பத்து மணிக்கு 'ராம்கே'வில் ஆஜராகி விட்டார்.

பளபளவென்று கம்பீரமாக நின்ற 'பைக்'கைத் தொட்டுப் பார்த்து, "என்ன விலை இருக்குங்க?" என்று விசாரித்தார். செந்தில்குமாரைத் தட்டிக்கொடுத்து, "வாழ்த்துக்கள்!" என்று நெஞ்சிலிருந்து சொன்னார்.

டி.வி.எஸ். சுஸுகியின் சீனியர் ரீஜனல் மேனேஜர் சீனிவாசன், வைரமுத்துவிடம்

# "இது எனக்கு ஃபர்ஸ்ட் கிளாஸ் டைம் சார்!"

## -மோட்டார் சைக்கிள் பரிசு பெற்ற செந்தில்குமார்




மோட்டார் சைக்கிள் சாவியைக் கொடுக்க, அவர் செந்தில்குமாரிடம் தந்து, "இந்த வெற்றி, மேலும் பல வெற்றிகளுக்கு ஆரம்பமாயிருக்கட்டும்" என்று வாழ்த்தினார்.

தொடர்ந்து, "ரொம்ப நல்ல காரியம் செய்கிறீர்கள். கல்கியுடன் இணைந்து செய்வதால் இன்னும் சிறப்பு" என்று வைரமுத்து சீனிவாசனை வாழ்த்தினார்.

முன்னதாக வைரமுத்து, சீனிவாசன், செந்தில் குமார் ஆகியோருக்கு நமது நிர்வாக ஆசிரியர் மாலை அணிவித்து வரவேற்றார்.

படம் : **யோகா**

# எய்ட்ஸின் தம்பி எபோலா!

ஆப்பிரிக்காவில், ஸெயர் என்ற நாடு இப்போது கோரமான தொற்று நோயின் பிடியில் சிக்கிக் கொண்டிருக்கிறது. அதாவது ஒருவகை ஜுரத்தை வரவழைக்கும் கிருமி.

இந்தத் தொற்று நோய்க் கிருமிக்கு எபோலா என்று பெயர். 1976ல் முதல் முதலில் எபோலா என்ற பகுதியில்தான் இந்தக் கொடிய தொற்று நோய்க் கிருமி கண்டுபிடிக்கப்பட்டதால், இடத்தின் பெயரையே நோய்க்கிருமிக்கும் வைத்து விட்டார்கள்! அந்த இடத்தில் வசித்த 600 பேரில், சுமார் 500 பேருக்கு மேல் அப்போது இறந்து போய்விட்டார்கள்!

ஸெயருக்கு வெளியே இந்த நோய் பரவிடும் அபாயம் இல்லை என்று முதலில் கருதப்பட்டாலும், மத்திய ஆப்பிரிக்க நாடான ஸெயரின் தலைநகரான கின்ஷாஸாவிலிருந்து சுமார் 250 கிலோ மீட்டர் தொலைவிலுள்ள கிக்விட் நகருக்கு இது பரவியிருப்பதாகத் தெரிந்ததும் உலகச் சுகாதார அமைப்புக்கு அதிர்ச்சியாகத்தான் இருந்தது. அங்குள்ள விமானக் கூடத்திலிருந்து பயணம் செய்யும் பயணிகளில் சிலருக்கு இக்கிருமித் தொற்று இருந்தால், பிற நாடுகளிலும் வெகு விரைவில் பரவிவிடும் என்பதுதான் அச்சத்துக்குக் காரணம்.

இது பற்றி முன்னாள் ஸ்டான்லி மருத்துவமனை மருத்துவர் சீனிவாச சோமயாஜியை விசாரித்தபோது, அவர் சொன்னார்:

"ஆப்பிரிக்கா மிகவும் பின்தங்கிய நாடுகளை அடக்கிய கண்டம். எபோலா தொற்று நோய்க்கிருமி இருக்கிறது என்று கண்டதும், பாதிக்கப்பட்ட இடங்களிலிருந்து டாக்டர்களும், நர்சுகளும் கூட பயத்தில் ஓடிவிட்டார்கள் என்பதைச் செய்திகள் சொல்லுகின்றன.

"இந்தத் தொற்றுநோய்க் கிருமியை அழித்துப் போராட இன்னும் எந்த வாக்ஸினும், சிகிச்சை முறையும் கண்டுபிடிக்கப்படவில்லை. ஆனால் நோய் தாக்கப்பட்டவரும், மருத்துவம் செய்பவரும் கூடுமான வரை சுத்தமாக இருந்தால், இது பரவுவது கட்டுப்படுத்தப்படலாம். ஆன்டிசெப்டிக் முறைப்படி கைகளைக் கழுவிக் கொள்ள வேண்டும். அப்படிச் செய்ய அவர்களிடம் சுத்தமான நீர் தட்டுப்பாடாய் இருக்கிறது. ஊசிகளும், சிரிஞ்சுகளும் போதிய அளவுக்கு இல்லாததால், அவற்றைத் திரும்பத் திரும்ப உபயோகிப்பதும் நோய் பரவுவதற்கு இன்னொரு காரணம் என்று தெரிகிறது."

எபோலா தொற்று நோய்க் கிருமியைக் கதாநாயகனாக வைத்து, சென்ற ஆண்டு வெளியான நாவல் தான் "த ஹாட் ஸோன்" ரிச்சர்டு ப்ரெஸ்டன் எழுதிய இந்த நாவல் 30 வாரங்களுக்கு பெஸ்ட் செல்லர் பட்டியலில் இடம் பெற்றிருந்தது. 1987ல் 'அவுட் பிரேக்' என்ற திரைப் படம் கூட வந்து கிலியை ஏற்படுத்தியிருக்கிறது!

- சாருகேசி

"இந்தத் தொற்றுநோய்க் கிருமியை அழித்துப் போராட இன்னும் எந்த வாக்ஸினும், சிகிச்சை முறையும் கண்டுபிடிக்கப்படவில்லை."




சொல்ல
நினைத்தால்
நாணம் தடுக்கும்
சொல்லா திருந்
தால் வியர்வை
துளிர்க்கும்
பெண்மை
உணர்வோ
பின்விப் பிழியும்....
— இது கவியரசர் கண்ணதாசன் சொன்னது.

தனது காதலைத் தனது காதலனிடம் வெளிப்படுத்த நினைக்கும் ஒரு பெண்ணுக்குத்தான் இந்த நிலையா என்ன? ஆணுக்கு மட்டும் இல்லையா? 'அதையேன் கேட்கிறீர்கள்? அதை அவளிடம் தெரிவிப்பதற்குள் நான் பட்ட பாடு இருக்கிறதே.... அது ஒரு பிரசவ வேதனை போங்கள்!' என்றுதான் ஆண்களும் சொல்கிறார்கள்!

இருந்தாலும் ஒரு காலகட்டத்தில் எப்படியாவது தங்கள் காதலை வெளிப்படுத்தித்தானே இருக்க வேண்டும்! எப்படி வெளிப்படுத்தினார்கள். எப்படி 'ஐ லவ் யூ' என்கிற அந்த மந்திர வார்த்தைகளைச் சொன்னார்கள்? சில காதல் ஜோடிகளிடம் விசாரித்தோம்.

# 'I love

## சீனிவாசன் - பத்மாவதி :

"பத்மினியை (வீட்டுப் பெயர் பத்மினி) முதலில் நான் சந்தித்தது சைதாப்பேட்டை லட்சுமி கமர்ஷியல் (டைப் ரைட்டிங்) இன்ஸ்டிடியூட்டில்தான்" என்று ஆரம்பித்தார் சீனிவாசன். அசோக் லேலண்ட் ஃபைனான்ஸில் அதிகாரி.

"அப்போது (85-86) நான் சி.ஏ. சேர்ந்திருந்த சமயம். அவன் டிகிரி படித்துக் கொண்டிருந்தான். கண்டதும் காதல் என்றெல்லாம் கப்ஸா விடமாட்டேன். தினமும் இன்ஸ்டிடியூட்டில் அவளைப் பார்ப்பேன். அடுத்த வீட் ஆசாமி என்கிற வகையில் அவ்வப்போது ஒரு 'ஹலோ'. ஒரு 'ஸ்மைல்'. அவ்வளவுதான்.

"முதல் முதலாக அவளைப் பற்றி காரணமில்லாமல் அடிக்கடி யோசிக்கத் தோன்றிய போதுதான் இயல்பாக எங்கள் பெயர்ப் பொருத்தம் பற்றி நினைத்துப் பார்த்தேன். அதிலிருந்துதான் காதலிக்கும் ஐடியா வந்ததென்று நினைக்கிறேன். மெல்ல அவளைப் பற்றி, அவள் குடும்பம் பற்றியெல்லாம் - அவளுக்குத் தெரியாமலேயே விசாரித்துத் தெரிந்து கொண்டேன்.

"அடக்கமாக, கனிவாக கொஞ்சம் 'பார்க்கபிளா'கவும் இருந்தது ரொம்பப் பிடித்துப் போயிற்று. என்ன காரணத்தாலோ - இவள் எனக்குத்தான் என்று தோன்றி விட்டது.

"பட்டும் படாமலும் அவளிடம் முதலில் என் விருப்பத்தைத் தெரிவித்தேன். ஒரு எகிறு எகிறினாளே பார்ப்போம்! அமெரிக்கன் லைப்ரரி வாசலில் வைத்து, காச் மூச்சென்று கத்தித் தீர்த்து விட்டாள்!

"கேட்டுக் கொண்டேன்... வேறு வழி! ஓ.கே. இனி இதுபற்றிப் பேசவில்லை என்கிற முடிவில் திரும்பினோம்.

"அங்கிருந்து பஸ்ஸில் (ஒரே பஸ்தான்) திரும்பி சைதை வருகிறவரை ஒரு வார்த்தை பேசவில்லை.... இறங்கி ஒரு கடையில் கூல் ட்ரிங்க் சாப்பிட்டோம். 'எனக்கொன்றும் நீ வாங்கித் தர வேண்டாம்' என்று அவளே காசு கொடுத்து விட்டாள். சரி, அவ்வளவுதான் என்று கிளம்புகையில் சட்டென்று கேட்டேன்.

'இனி உன்னை வழியில் எங்காவது பார்க்க நேர்ந்தால் ஹாய் சொல்லலாமா? அட்லீஸ்ட் ஃப்ரெண்ட் என்ற முறையிலாவது? அல்லது, தெரியாத முகம் மாதிரி இருப்பி



• கீதா ரகுநாதன்

கொண்டு போய் விடணுமா?'

''அவளுக்கு என்ன தோன்றியதோ - சின்னதாகச் சிரித்து உற்றுப் பார்த்தாள். அந்தப் பார்வையில் 'ஓ.கே.' தெரிந்தது! அந்தக் கணம்....: அத்தனை நேரம் சகட்டு மேனிக்குக் கத்தியவன், விரோதி போல் பார்த்தவன் எப்படி மாற்றம் கொண்டான்! இன்று வரைக்கும் தெரியவில்லை!''

பத்மாவதியிடம் கேட்டோம்.

"இன்ஸ்டன்ட் மாற்றத்துக்குக் காரணம் என்ன?"

''எனக்கும் அதுதான் புரியவில்லை! ஏன் ஓ.கே. போகிறது. அஃப் கோர்ஸ், நூறு பர்ஸன்ட் லவ் மேரேஜ் தான்.... ஆனால் இன்றுவரை அந்த மூன்று வார்த்தைகளைச் சொல்லிக் கொண்டதே இல்லை!''

• பத்மாவதி சீனிவாசன் (படம் காவேரா திருஞானம்)

# 'ஐ லவ் you' சொன்னது எப்படி?

• ஜெயந்தி ஸ்ரீதர்





## கீதா - ரகுநாதன் :

"நான் வேலை செய்து வந்த வங்கிக் கிளைக்கு ரகுநாதன் தொடர்ந்து வரத் தொடங்கினார். வேறு வழியில்லை, அவரும் அதே கிளையில் வேலை செய்து கொண்டிருந்தாரே! என்னுடைய அமைதியான அதே சமயம் பந்தா இல்லாமல் நடந்து கொள்ளும் அணுகுமுறை அவருக்குப் பிடித்திருந்தது (என்று பின்னாளில் குறிப்பிட்டார்). நாட்டு நடப்புக்களை அவர் அறிந்து வைத்திருந்த பாங்கும், ஜாதி மத வேறுபாடு இல்லாமல் பழகிய விதமும் அவரிடம் எனக்குப் பிடித்திருந்தது - ஒரு சக ஊழியை என்கிற அளவில்.

"ஐ லவ்-யூ" என்ற ஸ்டாக் வசனத்தை அவர் என்னிடம் சொல்லவில்லை. பதிலாக ஒரு கடிதத்தை அலுவலகத்தில் நீட்டினார். படபடப்போடு படித்தேன். ஒரு நண்பனைப் போலத் தொடங்கியிருந்தார். 'உங்கள் வருங்காலத் திட்டங்கள் என்ன? உங்கள் எண்ண ஓட்டங்கள் எப்படி?' - இப்படி ஆரம்பித்த கடிதம் கடைசியில், 'என்னைத் திருமணம் செய்து கொள்ளச் சம்மதமா? உன் முடிவு எதுவாக இருந்தாலும் பளிச்சென்று என்னிடம் கூறி விடலாம்' என்று முடிந்திருந்தது.

''அதெப்படி 'பளிச்'சென்று சொல்வது? யோசிக்க நான்கு நாட்கள் எடுத்துக் கொண்டேன். பிறகு ஒருநாள் மாலை ஸ்வாகத் ஹோட்டலுக்குக் கூட வரச் சொன்னேன். காப்பி குடிப்பதற்கு மட்டுமல்ல அந்த அழைப்பு என்பது இருவருக்குமே தெரிந்திருந்தது. பிறகென்ன, மனம் விட்டுப்

சொல்லத் தோன்றிற்று? என்னையறியாமல் இப்படிச் சொன்னேன்.: "Well, you can talk with me, walk with me, play with me, pray with me, and be with me for ever. Enough?"

"அது சரி, என்ன கேட்டீர்கள்... ஐ லவ் யூ சொன்னது எப்படி என்றா.... எங்களுக்குக் கல்யாணமாகி, குழந்தைக்குக் கூட ஒரு வயசாகப்

பேசினோம். ஒரு வருடம் கழித்து மணம் செய்து கொண்டோம்."

### பத்மா - வினோவிக்டர் :

"என் நெருங்கிய தோழியின் குடும்ப நண்பர் வினோ விக்டர். ரயிலில் அறிமுகம் செய்து வைக்கப்பட்டோம். முதலில் காதல், கல்யாணம் என்றெல்லாம் யோசிக்காமல் நட்பாகத்தான் பழகினோம். அதனால் தானோ என்னவோ மற்றவர் மனத்தில் உயர்ந்த இடத்தைப் பிடிக்கவேண்டுமென் பதற்காக நல்ல குணங்களை மட்டுமே 'ஹை லைட்' செய்து கொண்டதில்லை. இருவரின் குறைகளும் மற்றவருக்குத் தெரிந்தே இருந் தன. உதாரணமாக எனது மூக்குக்கு மேல் வரும் கோபத்தை எங்கள் இரண்டாம் சந்திப்பிலேயே அவர் உணர்ந்துவிட்டார். சுமார் ஐந்து வருடப் பழக்கத்திற்குப் பிறகு அவர் - சினிமாத்தனமான வார்த்தைகள் எதுவுமில்லாமலேயே - என்னை மணந்து கொள்ள விரும்புவதைச் சொன்னார். குணங்களில் பல ஒத்துப் போனாலும் மதம் தடையாக இருந்தது. தயங்கினேன். பிறகு என் வழியிலேயே நானும் எங்கள் குழந்தை களும் இருக்க அனுமதித்து, எனது பல பிரச் னைகளுக்கு நடுவே பக்க பலமாக இருக்க ஒத்துக் கொண்டு, இன்று வரை அப்படியே இருக்கும் தாரான மனது அவருக்கு. கல்யா ணத்துக்கு முன் நேசித்த வருடங்களில் பார்க், ஹோட்டல் என்று எங்கும் போன தில்லை. இருவரின் வீடுகளிலேயே சந்தித்துக் கொண்டோம்."

### ஜெயந்தி - ஸ்ரீதர் :

"சக ஊழியர்கள் என்ற முறையில் துவங் கிய எங்கள் நட்பு வளர்ந்து, மிக நெருக்கமா னோம்.

"இரு குடும்பத்தினருக்கும் இது தெரிந்த நிலையில், நான், என் அம்மா, ஸ்ரீதர், அவரது சகோதரி ஆகிய நான்கு பேரும் மந்திராலயம் சென்றோம். அங்கே நாங்கள் இருவரும் மட்டும் இரவில் வாக்கிங் போன போதுதான் ஸ்ரீதர் தன் எண்ணத்தை வெளிப்படுத்தினார். 'ஐ லவ் யூ!' என்று டய லாக் அடிக்காமல், 'மிக நெருங்கிய நமது நட்பிலே இடைவெளி ஏற்படுவதை நான் விரும்பவில்லை. நமது திருமணம்தான் அதற்கு நிரந்தரமான தீர்வு. நீ என்ன நினைக் கிறாய்? உடனடியாகப் பதில் சொல்ல வேண்டாம். யோசித்து முடிவைச் சொல்' என்றார்.

"அடுத்த பன்னிரண்டு நாள் அவருக்கு சஸ்பென்ஸ் வைத்து, நான்றாக யோசித்து, நெருக்கமான நண்பர்கள் சிலரையும் கலந்து ஆலோசித்து, என் சம்மதத்தைத் தெரிவித் தேன். 'நான் உங்களைச் சகோதரனாகத் தானே நினைத்தேன்!' என வெடிகுண்டைப் போட்டு விடுவாயோ? என்று எனக்கு உள்ளூர ஒரு பதைபதைப்பு இருந்தது' என்று பின்னர் அவர் என்னிடம் கூறியதுண்டு."

பேட்டிகள் : **குல்ஷா, கிச்சா, மௌலி**



# சேதி கேட்டோ!

**கே**ரள அரசின் மின்துறை அமைச்சர் கார்த்திகேயன் ஒரு நிகழ்ச்சிக்காகக் கோட்டயம் வந்திருந்தார். நிகழ்ச்சி முடிந்து திரும்பிக் கொண்டிருந்தபோது, காப்பி குடிக்க வேண்டு மென்கிற ஆசை அமைச்சருக்கு வரவே, காரை நிறுத்தச் சொன்னார். நின்ற இடம், ஏற்றுமானூர். நேரம், மாலை ஆறு மணிக்குமேல். அமைச்சர் ஹோட்டலில் நுழைவதற்கும் கரண்ட் கட் ஆவ தற்கும் சரியாக இருந்தது. ஹோட்டல்காரரிடம் 'இப்போது ஏன் கரண்ட் கட் ஆனது? பவர் கட் என்றெல்லாம் எதுவுமே கிடையாதே!' என்று அமைச்சர் விசாரிக்க, 'இங்கு இதெல்லாம் சகஜம் தான். திடீரென்று சொல்லாமல் கொள்ளாமல் தினமும் இப்படிச் செய்து விடுகிறார்கள்!' என்று ஹோட்டல்காரருடன் பொது மக்களும் சேர்ந்து முறையிட்டார்கள். அமைச்சர் அரை மணிநேரம் காத்திருந்து பார்த்தும் கரண்ட் வரவில்லை. வேறு வழியின்றி மெழுகுவர்த்தி வெளிச்சத்தில் காப்பி குடித்து விட்டுக் கிளம்பினார்!

**இ**னி பொது இடங்களில் குப்பை போடு வோருக்குச் சிங்கப்பூர் பாணியில் அபராதம் விதிக்கப்போகிறது கேரள அரசு. போடுகிற குப் பையின் அளவைப் பொறுத்து அபராதம் அமையு மாம். இதேபோல் அரசுத்துறை போக்குவரத்துக் கழக பஸ்கள், போக்குவரத்து விதிகளை மீறினா லும் டிரைவர்கள் மீது உடனடி நடவடிக்கை எடுக்கப்படும். அளவுக்கு அதிகமாகப் பயணி களை ஏற்றுகிற கண்டக்டர்களுக்கும் நடவடிக்கை காத்திருக்கிறதாம். 'கேட்க நன்றாகத்தான் இருக் கிறது; எந்த அளவுக்குச் செயல்படுத்தப்போகி றார்கள்?" என்பதுதான் பொது மக்களின் சந் தேகம்!

திருவனந்தபுரத்திலிருந்து: **எஸ். எஸ்.மணி.**

# Kalki Shopping Page

என் மேலேயா வழிக்கு போய் போறே.... ரிமோட் கண்ட்ரோல் பட்டனை அழுத்தி ஒரு வழி பண்றேன்....




1995 மே 28
யுவ வைகாசி 14
மலர் : 53
இதழ் : 43

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. - பாரதியார்.




## ரயில் பயணத்துக்கு டேஞ்சர் சிக்னல்!

ஜாபர் ஷெரீஃப் தருகிற ஐயாயிரம் ரூபாயோ அவருடன் போட்டி போட்டுக் கொண்டு ஜெயலலிதா அறிவித்துள்ள பத்தாயிரம் ரூபாயோ, பின்னர் அறிவிக்கப்பட்ட இரண்டு லட்சம் நஷ்ட ஈடோ போன உயிரைத் திரும்பக் கொண்டு வந்துவிடப் போவதில்லை. ஏதோ ஈமக் கடன்களை நிறைவேற்றவாவது கையைப் பிசைந்து கொண்டு நிற்காமல், குடும்பத்தினருக்கு உடனடி நிவாரணம் கிடைத்தால் நல்லது. ஆனால் அரசு அவ்வளவு துரிதமாகச் செயல்படுமா? நூறு விதமான விண்ணப்பப் படிவங்களும் சடங்குகளும் சான்றிதழ்களும் அதிகார வர்க்கமும் இடையூறாக நிற்குமே!

முதலில் வந்த செய்தி சிறிய ரயில் விபத்து என்றுதான் எண்ணச் செய்தது. மாலைக்குள் அதுவே விசுவரூபமெடுத்து, அறுபது பேருக்கு மேல் பலி-நூற்றுக் கணக்கானோருக்குக் காயம் என்றாகிவிட்டது. இதனால் டேனிஷ்பேட்டை அருகே நடந்த ரயில் விபத்தின் சோகமும் அதிர்ச்சியும் பன்மடங்கு அதிகரிக்கிறது. பயணிகளின் துயரக் கதைகளைக் கேட்டு நமது மனங்களில் பொங்கும் அனுதாபம் ஒரு புறமிருக்க, 'ரயில் விபத்துக்கள் ஏன் அடிக்கடி நிகழ்கின்றன?' என்ற கேள்வியும் எழுகிறது.

ஏதோ வெள்ளம், அல்லது நாசவேலை - ரயில் தடம்புரண்டது என்றால்




**டிரைவர்கள், ஸிக்னல் மேன்கள் போன்றோருக்குப் போதிய அளவு பயிற்சி தரப்படுகிறதா? திறமையாளர்கள் மட்டுமே இது போன்ற முக்கிய பணிகளில் நியமிக்கப்படுகிறார்களா?**

கூடப் புரிந்து கொள்ளலாம். ஒரே பாதையில் எதிரும் புதிருமாக வந்து ரயில்கள் மோதிக் கொள்வது என்பது வெட்கக் கேடு. ரயில்வே அமைச்சருக்கும், நிர்வாகத்துக்கும் பெரும் தலைகுனிவு. இரட்டை ரயில்பாதைகள் இருந்தும் கூட, அந்த வட்டாரத்தில் ஒரு வசதிக்காக, இரண்டு ரயில் பாதைகளிலும் இரு திசைகளிலும் ரயில்கள் ஓட அனுமதிக்கப்பட்டுள்ளன! இருப்பினும், விபத்து நேர வழியே இல்லாதபடி-குறைகூற இடமில்லாதவாறு-ஸிக்னல் ஸிஸ்டம் அமைக்கப்பட்டிருப்பதாகவும் ரயில்வே நிர்வாகம் சொல்கிறது.

கருவிகளில் பழுதில்லை எனில் அவற்றைப் பயன்படுத்தும் மனிதர்களிடம் தான் கோளாறு. 'ஸிக்னல்மேன் தவறு' என்றும் 'சரக்கு ரயிலின் எஞ்சின் டிரைவர் செய்த குற்றம்' என்றும் இருவிதமாகவும் பேசப்படுகிறது. இவ்வாறு பழி சுமத்தி மேலே உள்ளவர்கள் தப்பிக்கப் பார்ப்பது நியாயமல்ல. எந்த டிரைவரும் மோதிக் கொண்டு சாகும் நோக்கில் ரயிலைச் செலுத்தமாட்டான்.

எந்த ஸிக்னல் மேனும் விபத்து நிகழ வேண்டும் என்று விரும்பமாட்டான்.

இவர்களை வேலைகளில் அமர்த்தும் உயர் அதிகாரிகள் சற்று ஆத்ம பரிசோதனையில் ஈடுபட வேண்டும். டிரைவர்கள், ஸிக்னல் மேன்கள் போன்றோருக்குப் போதிய அளவு பயிற்சி தரப்படுகிறதா? திறமையாளர்கள் மட்டுமே இது போன்ற முக்கிய பணிகளில் நியமிக்கப்படுகிறார்களா? புதிய ரயில் பாதைகளும் நவீன முறை ஸிக்னல்களும் அமைக்கப்படும்போது, அவற்றில் மறு பயிற்சி தரப்படுகிறதா? சரியாகப் புரிந்து கொண்டார்களா என்று சோதிக்கப்படுகிறதா? இஞ்சின் டிரைவர்களின் தேக ஆரோக்கியம்- குறிப்பாகக் கண் பார்வை அடிக்கடி சோதனைக்கு உள்ளாகிறதா? சரக்கு ரயில்தானே என்பதால் அதன் டிரைவருக்குக் குறைந்த அளவு தகுதியும் சம்பளமும் நிர்ணயிக்கப்படுகிறதா? டபுள் டிராக் இருந்தும் ஒரே பாதையில் எதிரும் புதிருமாக ரயில்கள் அனுப்பப்பட வேண்டிய அவசியம் என்ன?

பதில்கள் கோரி, மக்கள் உரக்கவே குரல் எழுப்புகிறார்கள். சட்ட பூர்வமான விசாரணை நிதானமாகத் தொடங்கி, ஆற அமர நடந்து, மெல்ல மெல்ல அறிக்கை தயாராகி, அது அரசுக்குப் போய்ச் சேருவதற்குள் எல்லோரும் இந்த விபத்தை மறந்து, வேறு பரபரப்புச் செய்தியில் ஆழ்ந்து கிடப்பார்கள். அறிக்கை நூறோடு நூற்றி ஒன்றாக அலமாரியில் அரிதுயில் கொள்ளும்.

ஆக, மக்கள் எழுப்பும் கேள்விகளை விபத்தில் உயிர் துறந்தோரின் சடலங்களுடன் சேர்த்துப் புதைத்து விட வேண்டியதுதான்!

# விமானங்களின் பாதுகாப்புக்கு விந்தையான வடிவமைப்பு!

உலக யுத்தத்தின்போது, எதிரி கப்பல் அல்லது விமானம் வருகிற திசை, தூரம், உயரம் முதலியவற்றை நிர்ணயிக்கக் கண்டு பிடிக்கப்பட்டது ரேடார் கருவி. மின்காந்த ஒலி அலைகளை அனுப்பி, கிடைக்கும் எதிரொலிகளைக் கொண்டு எதிரியின் நிலையை அறிவார்கள்.

சமீப காலத்தில் இந்த ரேடார் கருவியின் கண்காணிப்பிலிருந்து தப்புகிற விதமாகப் போர் விமானங்களை வடிவமைக்கும் முயற்சியிலும் விஞ்ஞானிகள் வெற்றி கண்டுள்ளனர்!

அமைதிப் பணியாக ரேடார், இன்று விமான நிலையங்களில் வந்து இறங்குகிற, கிளம்பிச் செல்கிற விமானங்களைக் கண்ட்ரோல் டவரிலிருந்து கண்காணிக்க உதவுகிறது. லண்டன் ஹீத்ரோ விமான தளத்தில் ஒவ்வொரு நிமிஷமும் ஒரு விமானம் தரை இறங்குகிறது; அதே நிமிஷத்தில் ஒரு விமானம் உயரே கிளம்புகிறது என்னும் போது இந்த விமானப் போக்குவரத்தைக் கட்டுப்படுத்துவது எவ்வளவு சிரமம் என்பது புரியும்.

இதில் மேலும் ஒரு சிக்கல். சில சமயங்களில் விமான தளத்துக்கு அக்கம் பக்கத்திலுள்ள கட்டடங்களிலிருந்து எழும் எதிரொலிகள் விமானம் - விமானதள ரேடார் சமிக்ஞைகளைக் குழப்பிவிடுகிறது. இதனால் எதிர்பாராமல் விபத்து நேரலாம் என்பதால் இந்த உபரி எதிரொலிகளை வடிகட்ட வேண்டும். இதற்காக ஒரு நவீன யுக்தியை பிரிட்டிஷ் ஏர்வேஸ் கையாண்டிருக்கிறது. கண்ட்ரோல் டவரின் கட்டட அமைப்பே இடையூறான எதிரொலி அலைகளை வடிகட்டிவிடும்!

இந்தக் கட்டடக் கலையை constructional geometry என்கிறார்கள். கட்டடத்தின் மையப் பகுதியில் வெற்றிடம் விட்டு, கீழ்ப் பகுதியில் ஒரு சில அடிகளை மட்டுமே செங்குத்தாக அமைத்துள்ளனர். இதற்கு மேற்பட்ட பகுதி ஏழு டிகிரி கோணத்தில் வெளிப்புறம் விரிகிறது. முதல் கூரை வரை இப்படி. முதல் மாடி பதினாலு டிகிரி கோணத்தில் விரிகிறது.





இரண்டாவது மாடி இருபத்தோரு டிகிரி. பூ பூத்த மாதிரி விரிவதுடன்; கட்டடத்தின் பட்டை பட்டையான வெளிப்புற அமைப்பு ராடார் ஊடுருவலை வடிகட்டி, கீழே தரை நோக்கி அனுப்பிவிடும். இந்த அபூர்வமான கட்டடத்தை வடிவமைத்தவர் நிகலஸ் கிரிம்ஷா.

நன்றி : **லண்டன் பிக்சர் சர்விஸ்**

# 8

# என்னுயிரும் நீயல்லவோ

பாலகுமாரன்

கதிரேசன் வீட்டு ஹாலில் வாரப் பத்திரிகைகள் படித்துக்கொண்டு வருகிற டெலிபோன் அழைப்புகளுக்குப் பதில் சொல்லிக்கொண்டு வாசலுக்கு வந்து துக்கம் கேட்பவர்களுக்குத் தலையசைத்துக் கொண்டு பொழுதைக் கழித்துக் கொண்டிருந்தான்.

"இன்னும் பதினைஞ்சு நாளைக்கு எங்கயும் போகப்படாது. வீட்டோட இருக்கணும். துக்கம் கேட்க மனுஷா வந்து பதில் சொல்ல நீ இல்லைன்னாக்க, உன் அப்பா சாவுல யாருக்கும் வருத்தம் இல்லேன்னு ஆகும்..."

"இன்னும் ஒரு வருஷம் உன் படிப்பு முடியறவரைக்கும் உங்கப்பா இருந்திருக்கலாம். என்னவோ சட்டுன்னு போயிட்டாரு. இந்த வருஷம் பரீட்சை எழுதிட்டன்னா படிப்பு முடிஞ்சிரும்ல... நேர எஸ்டேட் போயிடு. வேலை கத்துக்க. நாச்சியப்பன் ஏலக்கால மட்டும்தான் கவனமா இருந்தான். காப்பி வாங்க வேயில்லை. நீ காப்பி வாங்கு!'' அம்மாவின் பக்கத்து உறவு ஒன்று உபதேசம் செய்தது.

"நீ ஏன் காப்பி வாங்கணும்கறதுக்குக் காரணம் சொல்றேன். ஏலக்கா என்ன உயரத்துல வருதோ அதே உயரத்துல காப்பியும் வரும். காப்பிக்கு பாடு கம்மி. ஒரு மாதிரி விலை ஏறிட்டே போவுதே தவிர இறங்கக் காணம். நான் மெட்ராஸ் போய் காப்பி பயிர் பத்தி உனக்கொரு புஸ்தகம் அனுப்பறேன். அப்பா என்ன செஞ்சாரோ அதைத்தான் நீ செய்யணும்னு இல்ல. ஒரு கெட்டிக்காரப்புள்ளை அப்பன் செஞ்சதுக்கு மேலயும் செய்யணும். தாய் எட்டடின்னா குட்டி பதினாறடின்னு சொல்றது இதத்தான். நின்னு அப்பா சொல்லிக் கொடுக்க வேண்டிய வயசுல நீ தனியா கத்துக்கும்படி வந்திருச்சு..."

- ஆளுக்கு ஆள்... தலைக்குத் தலை... ஏதேதோ உறவுகள் என்னென்னவோ உபதேசங்கள் வழங்கின!

உறவினர்கள் நண்பர்கள் வருகை அடங்கினதும் ஒரு நாள் பூட்டப்பட்டிருந்த அப்பாவின் அறையைத் திறந்து அப்பாவின் நாற்காலியைக் கும்பிட்டுவிட்டு கதிரேசன் அதில் உட்கார்ந்து விட்டான். எஸ்டேட் ஃபைலைத் திறந்து, வாங்கின நாளிலிருந்து அதற்கு உண்டான செலவுகளைப் படிக்கத் துவங்கினான். அப்பாவின் கைக்கு எஸ்டேட் கிடைத்த பிறகு தபதபவென்று காசு எஸ்டேட்டில் கொட்டப் பட்டிருக்கிறது. மின்சாரம் வரவும், கட்டடங்கள் கட்டவும் நீண்ட குழாய்கள் போடவும் பள்ளத்தாக்கில் கிணறு தோண்டவும் மாதாமாதம் காசு இறைக்கப்பட்டிருந்தது. அந்த வருடக் கடைசியில் ரூபாய் பத்து செலவு; ரூபாய் ரெண்டு வரவு என்பதாய்க் கணக்கு முடிக்கப்பட்டிருந்தது. அடுத்த வருஷம் நஷ்டம் குறைக்கப்பட்டிருந்தது. மூன்றாவது வருடம்தான் காசு அள்ளியிருந்தார். இந்திய ஏலக்காய்க்கு அரபு நாடுகளில் மார்க்கெட் கிடைத்த வருடம் அது. எல்லோரும் ஏலக்காய் விளைச்சலில் தளர்ந்து போயிருக்க ஏதோ ஒரு காரணத்தால் அப்பா மட்டும் மும்முரமாய் இறங்கியிருந்தார். அந்த நம்பிக்கைதான் அவரை ஒரு நல்ல நிலைக்கு உயர்த்தியிருந்தது. ஒவ்வொரு வருடக் கணக்காய்ப் பார்த்துக் கொண்டு, கடைசி வருடக் கணக்கு பார்க்கும் போது அம்மா உள்ளே வந்தாள்.



"என்ன தம்பி...? எஸ்டேட் உள்ள பூந்துரலாம்னு பாக்கறியா...? படிப்பு முடிக்கணும்யா. அது ரொம்ப முக்கியம். மத்தவங்க பேசறது பார்த்துட்டு எக்கேடு கெட்டா நமக்கு என்னான்னு நினைக்காத. நமக்கு இருக்கிற பல விஷயங்கள்ள எஸ்டேட் ஒண்ணு. தேவகோட்டை வீட்டைப் போய்ப் பார்த்துட்டு வா. ஏலக்கா உரம்னு ஆரம்பிச்சு எல்லா பயிருக்கும் உர டீலர்ஷிப் எடுத்திருக்கார். உக்காந்தபடி அதையும்

கவனிக்கலாம். ஏலக்கா பத்தியோ காப்பி பத்தியோ நீ புஸ்தகம் படிக்க வேணாம். பகவதிகிட்ட கேட்டுத் தெரிஞ்சுக்கலாம். நீ என்னவா வருவேன்னு தெளிவா தெரிஞ்சாதான் உனக்குப் பொண்ணு குடுக்கறதுக்குச் சரியான ஆளுங்க வருவாங்க. ஒன்றுக்கு நாலு குடும்பம் போட்டி போடணும். நாலு குடும்பமும் பெரிய குடும்பமா இருக்கணும். அப்படி பொண்ணு கேட்டு வர்றதுதான் உனக்கும் மரியாதை. உங்கப்பாவுக்கும் மரியாதை....

"செட்டியார் போய் நாளாச்சு. இன்னும் நீ ஆபீஸ் ரூமுக்குள்ள போகலயேன்னு நினைச்சேன். நீயா உள்ள வந்து உக்காந்து கணக்கு பாக்கறது சந்தோஷம் தம்பி. அப்பாவோட லெட்டர் பேட்ல முத லெட்டர் பகவதிக்கு எழுது. வந்து துக்கம் கேட்டுப் போனதுக்கு நன்றி சொல்லி, வந்து போனதுக்கும் அங்க செய்ய வேண்டிய சடங்குகளுக்குமா ஆயிரம் ரூபா அனுப்பு. எல்லா சடங்கும் முடிஞ்சு அங்க எஸ்டேட் பார்க்க வரேன். எனக்கு எஸ்டேட் பத்தின விவரங்களைச் சொல்லிக் குடுக்கணும்னு கேளு. ஒரு தடவைக்கு ரெண்டு தடவையா மூணு வருஷத்துக் கணக்கை மனப்பாடம் பண்ணிக்க. அப்பத்தான் அவங்க விவரம் சொல்றபோது புதுசா இருக்காது."

"எஸ்டேட் என்னுதுன்னு ஒருத்தர் கத்தினாரே அவரை இதுவரைக்கும் நான் பார்த்ததேயில்லையே."

"தெரிஞ்சவங்க இந்த வீட்ல கத்துவாங்களா? தெரியாதவங்க தான் கத்துவாங்க! நீ என்னவா வரப் போறேன்னு நம்ம உறவுக் கூட்டம் உன்னிப்பா பாத்துக்கிட்டிருக்கு. வேற எதுலியாவது நீ ஜெயிச்சு பெரியாளா ஆயிடலாம். ஆனா ஏலக்கா எஸ்டேட் விஷயத்துல தோக்கப் படாது. எஸ்டேட்டை எந்தக் காரணம் கொண்டும் வித்துரக் கூடாது. எஸ்டேட்ல லாபம் இல்ல, நஷ்டம்னு பேர் வந்துடக் கூடாது. நான் ஏன் சொல்றேன்னு புரியுதா கதிரேசா?"

அம்மா ஆபீஸ் வாசற்படியோரம் சரிந்து உட்கார்ந்தாள்.

"நாச்சியப்ப செட்டியாரு நாகர்கோயில் பொண்ணுகிட்ட மயங்கிப் போய் நாலு தலை முறையா வந்த எஸ்டேட்டை அழிச்சுட்டான்ற பேர் வந்துரும். நான் பாத்துக்கறேன்னு போயிருக்கிற நம்ம உறவுக்காரங்க எஸ்டேட் எத்தனை வளமையா இருந்தாலும் எதுனா குறை சொல்லுவாங்க. நானில்ல போய் நிறுத்தினேன்னு பெருமை பேசுவாங்க.' ஒரு கணக்கு நோட்டு கிடையாதுய்யா எஸ்டேட்டுல. எல்லாம் செவுத்துல குறிச்சு வந்துருந்தாக. ஏதாவது குறை சொல்லுவாக.

"ஒரு எஸ்டேட் நல்லா நடக்குதுன்னு வெளிய எப்படி தெரியும் கதிரேசா? எஸ்டேட் விரிவாகணும். நாப்பது ஏக்கர் அறுபது ஏக்கர் ஆவணும். நீ நுழைஞ்ச மறு வருஷமே ஆவணும். அப்போதான் உறவு ஜனம் அடங்கும். அந்த எஸ்டேட்டை எங்கிட்ட குடுக்கச் சொல்லுங்கன்னு யாராவது புகார் குடுத்தா, செத்தவன் புள்ளை முன்ன நின்னு கவனிக்கிறான். எஸ்டேட்டைப் பெரிசா மாத்திருக்கான். இதுல மத்த விஷயங்கள் தன்னுபடி.. தேவையில்லாத புகார் குடுக்காதீங்கன்னு மத்த ஜனம் அவங்களை அடக்கிடும்!"

பல்வேறு லாப நஷ்ட கணக்குகள் பார்த்த குடும்பத்தில் பிறந்த அம்மா.... எல்லோராலும் ஆச்சி என்று கம்பீரமாக அழைக்கப்படுகிற அம்மா.... புருஷன் இறந்த சோகத்தைப் புறந்தள்ளிவிட்டு, குடும்பத்தின் வளமை பற்றியும் தன் புருஷனுக்கு அவப் பெயர் வந்து விடக் கூடாது என்பது பற்றியும் கரிசனம் கொண்டு பேசுவது பார்த்து கதிரேசன் வியந்தான்.

"கதிரேசா... உன் தங்கச்சிக்கு ஐயா செய்து வச்ச மாதிரி உனக்கு நகையோ



காசோ வைக்கலே. எந்த முதலுமில்லாம எஸ்டேட் என்னுதுன்னா உனக்கு என்னா மதிப்பிருக்கும்? நான் கல்யாணமாகும் போது ஃபைனான்ஸ் கம்பெனில கொஞ்சம் காசு போட்டுக் குடுத்தாங்க. எனக்கு அப்பப்ப வந்த காசையும் நான் ஃபைனான்ஸ்ல போட்டேன். இப்போ அது பன்னெண்டரை லட்சம் நிக்குது. அந்த பன்னெண்டரை லட்சத்தையும் உனக்குக் கடனா தரேன். அத முதலா வச்சு எதாவது செய். உனக்குப் பின்னால பன்னெண்டரை லட்சம் காசு இருக்குன்னு தைரியமா செய்.

"எலக்கா எஸ்டேட்டை விரிவுபடுத்துவியோ. அல்லது யாரோ சொன்னாப்புல காப்பி எஸ்டேட் வாங்கி அந்த வேலை கத்துக்குவியோ... எதுனா ஈடுபட்டுச் செய். சின்ன வயசுல பெரிய பொறுப்பு வந்து உக்காந்துருச்சு கதிரேசா. ஒரு விதத்துல இது நல்லதுக்குதான். இப்ப கஷ்டமா இருந்தாலும் பின்னால சுலபமாயிடும். அறுவது வயசுல எட்ட வேண்டிய மரியாதைய நாப்பது வயசுல எட்டிருவ."

கதிரேசனுக்கு அப்பா இறந்த அதிர்ச்சியை விட அம்மா தருகிறேன் என்கிற காசும் அது கடன் என்று சொல்லப்பட்டதும் அதைப் பொறுப்பாய் பெரிது பண்ணித் திருப்பி அடைக்க வேண்டிய அத்தியாவசியமும் பெரிய அதிர்ச்சியாய் இருந்தன. அந்த நிமிஷமே பஸ் ஏறி ஏலக்கா எஸ்டேட் போய்விட வேண்டும் என்று தோன்றியது. இதற்கு முன்பு அப்பாவோடு போனபோதெல்லாம் அங்கு சீராட்டப்பட்டது ஞாபகம் வந்தது. கதிரேசன் மறுபடியும் கணக்குகளை ஊன்றிப் படிக்கத் துவங்கினான். அந்த கணக்கிலிருந்து பல்வேறு வகையான குறிப்புகளை எடுத்துக் கொண்டான். மறுநாள் காலை ஆள் மூலமாக அவனுக்குக் காப்பி பற்றிய புத்தகம் ஒன்று வந்தது. போடிநாயக்கனூரிலிருந்த ஒரு உறவினருக்கு போன் போட்டு காப்பி எஸ்டேட் வாங்கலாமா என்று கேட்டான்.

"காசு வச்சிட்டு என்ன பண்றதுன்னு தெரியலை அப்படின்ற ஆளு காப்பி எஸ்டேட் வாங்கலாம். நீ சின்ன பையன். நீ எதுக்குப்பா காட்டுல கிடந்து போராடுற? மார்க்கெட்ல ஒருத்தன் நாலு மாடி கட்டடம் கட்டறான். இருவதுக்கு இருபது ரூம் மூனு லட்ச ரூபா சொல்றான். அப்படி ஒரு ரூம் வாங்கிக்க... சில்லறை வியாபாரிக்குக் கடன் கொடு. பத்து கடன்ல எட்டு திரும்பினா கூட அமோகமான லாபம். காப்பி எஸ்டேட் வேணாம். வச்சிட்டிருக்கிற நிறைய பேரு வித்துரலாம்னு ட்ரை பண்றாங்க."

மனம் குழம்பியது.

"எங்கப்பாரு உங்க எஸ்டேட் போனாரே வந்துட்டாரா?" ஏதோ ஒரு பெண் குரல் கேட்டது.

அப்படிப் போனதே தனக்குத் தெரியாது என்று சொல்லிவிட்டு போனைத் துண்டித்தான்.

அந்த செட்டியார் அங்கு போய் என்ன செய்யப் போகிறார் என்று ஆச்சரியப்பட்டான்.

அவர் விளிம்பில் நின்றார். உயர நின்று

# எழுத்தாளர்களே நினைவூட்டுகிறோம்!

இந்த ஆண்டின் அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டிக்கான கதைகளை அனுப்ப வேண்டிய கடைசி தேதி ஜூன்-15. மேலும் விவரங்களைச் சென்றவார கல்கி இதழில் பாருங்கள். இல்லையேல் அடுத்த வார இதழைப் பாருங்கள்.

— ஆசிரியர்.

எட்டிப் பார்க்கும்போது தலை [illegible]. இருபதடி ஆழத்தில் உருளையாய் இருப்பது முள்ளம்பன்றி என்று தெரிய ஒரு நிமிடம் பிடித்தது. நாராயணன் எதிரே தடியோடு நிற்பதும் அந்த சிறிய பிராணி சிரிப்போடு நிற்பதும் மாறி மாறி பார்த்தார். நாராயணன் மேலே இருக்கிறவரை லட்சியமே செய்ய வில்லை. சிலிர்ப்பிக் கொண்டிருக்கும் முட் பந்தில் முகம் எது என்று கவனமாகத் தேடிக் கொண்டிருந்தான். குச்சியால் தரை தட்டி ஒரே எட்டில் முன்னால் பாய்ந்து முள்ளம் பன்றியின் முகத்தைத் தாக்கினான். முள்ளம் பன்றி சட்டென்று பின்வாங்கியது. பின் வாங்கிய வேகத்திலேயே முன்னோக்கி ஓடத் துவங்கியது. குச்சியைப் படுக்கை வாட்டில் வைத்து நெருங்கி வந்த முள்ளம்பன்றியைக் குத்தி, மேலே வீசினான். முள்ளம்பன்றி குச்சியால் தூக்கப்பட்டு மேலே போய் விளிம்பில் நின்றவருக்குப் பின்னே விழுந் தது. அவர் ஹா என்று பயத்தோடு திரும்பி னார். திரும்பின வேகத்தில் மண் சரிய, சர சரவென்று மரத்தின் வேர்களைப் பிடித்துக் கொண்டு தரைக்கு வந்தார். உருண்டார். முள்ளம்பன்றி இருபதடி உயரத்திலுள்ள சமதளத்தில் ஓடிற்று. செடிகளுக்கு நடுவே புகுந்தது. இரண்டு நாட்களுக்கு முன்பு கட்டி வைத்த வெடி மருந்து கயிற்றை அறுத்துக் கொண்டு ஓட, படீரென்று வெடிமருந்து வெடிக்க, முகம் கிழிந்து கருண்டு விழுந்தது.

சத்தம் கேட்டு எஸ்டேட்டிலிருந்து எல் லோரும் ஓடி வந்தார்கள்.

"எம்மேல ஏன்டா முள்ளம்பன்னி தூக்கிப் போட்ட?" விழுந்தவர் உடம்பெல் லாம் ஆட கேட்டார்.

நாராயணன் பதில் பேசாது அவரைத் தூக்கி நிறுத்தினான்.

"நீர் இந்த இடத்துக்கு வருவீரு. இங்க உட்காருவீருன்னு எனக்குத் தெரியுமா. என் வேலையா நான் ஓடி வந்தேன். எம் பின் னாடி உம்ம யார் ஓடி வரச் சொன்னா?"

"நான் உக்காந்திருக்கறது தெரிஞ்சுதான்டா முள்ளம்பன்னிய எம்மேல தூக்கிப் போட்ட?"

"எனக்கு அந்தப் பிராணிய சாகடிக்கணும் ஒரு முள்ளம்பன்றி இருபது செடிகளைப் பாழாக்கிடும். இப்ப என்னா நடந்து போச்சு. மொள்ள கை பிடிச்சுட்டு மேல வா."

அவர் முழங்கை, நெஞ்சு எல்லாம் சிராய்த்திருந்தது. சறுக்கி விழுந்த சிராய்ப்பை விட முள்ளம்பன்றி கொடுத்த பயமே அவரை நடுங்க வைத்திருந்தது.

அவரைத் தூக்கி நிற்க வைத்துவிட்டு நாராயணன் வெடி வெடித்த இடத்துக்குப் போனான்.

"இந்த இடத்த நான் வாங்கறேன்டா. இந்த மொத்த எஸ்டேட்டையும் என் கைக் குள்ள கொண்டாறேன். எப்ப என் கைக்கு எஸ்டேட் வந்துதோ அப்ப இங்க உனக்கு வேலை இல்லை."

"அது ஒண்ணும் கஷ்டம் இல்லை. இது தமிழ்நாடு இல்ல. கேரளா. இங்க தோட்டத்துக் கெல்லாம் யூனியன். நம்ம யூனியன் நினைச்சா உங்க எஸ்டேட்டை உங்க கண் முன்னாலேயே அழிச்சிரும். எங்க யூனியன் ஆளுங்கள ஒரு தடவை பார்த்தா போதும். முள்ளம்பன்றி சாதாரணமாயிடும்."

சட்டைக் கிழிசலுடன் சரிவில் கால் பதித்து மேலேறியவருக்கு வெடி மருந்து அப்பிய மூங்கில் குழல்கள் ஞாபகம் வந்தது. 'ஊருக்குக் கிளம்பிடணும். கிளம்பறத்துக்கு முன்னாடி அந்த வெடி மருந்துக்கு நெருப்பு வச்சிட்டுப் போயிடணும். ஒரு மெழுகுவர்த் திய குழலுக்குப் பக்கத்துல கொளுத்திவுட் டுட்டுப் போயிடணும். அரைமணிக்கப்புறம் ஒரு குழல் வெடிச்சு நெருப்பு சிதறி உள்ள வச்சிருக்கிற அறுபது குழலும் சேர்ந்து வெடிக்கும். கூரை, சுவரு எல்லாம் பிச்சுக் கும். கீழ இறங்கிப் போய், மலைல தீவிரவா திங்க இருக்காங்கன்னு கலெக்டருக்கு லெட்டர் எழுதிப் போட்டிரணும். எம் மேலயா முள்ளம்பன்னி போடற! நான் உன்னை வாழ விடமாட்டேன்... இந்த எஸ் டேட்டை நாசம் பண்ணாத உக்காரமாட் டேன்...!"

அவர் மனசுக்குள் கறுவி ஊர் வந்த நேரம் அம்மாவிடமிருந்து பன்னிரண்டரை லட்சத்துக்கான காசோலையைக் கதிரேசன் வாங்கிக் கொண்டான். அது கடன். ஒரு வட்டி கடன். பெற்ற தாயானாலும் அதை அவன் அடைத்தேயாக வேண்டும்.

(தொடரும்)

# கர்ணா

மசாலாக்களில் இரண்டு வகை : அதிரடி மசாலா மற்றும் செண்ட்டிமெண்ட் மசாலா. முன்னதில் உடம்பு வலிக்கும். (நெளிவதால்). பின்னதில் மூக்கு வலிக்கும். (சிந்...)

இரண்டையும் போட்டுக் கலக்கி, அதிகம் நெளிய, சிந்த வைக்காமல் பொழுதுபோக்கை மட்டும் குறிக்கோளாகக் கொண்டு, அலட்டிக் கொள்ளாமல் எடுத்திருக்கிறார்கள்.

அர்ஜுனுக்கு இரண்டு வேஷம். வித் & வித் அவுட் மீசையுடன்.

'நடிப்பு' என்பதன் இலக்கணமாக எழுதி வைக்கப்பட்டிருக்கிற விஷயங்களையெல்லாம் பொருட்டாகக் கொள்ளாமல் ஒருவித 'கேஷுவல் டச்'சுடன் இப்படத்தில் அர்ஜுன் அணுகியிருக்கும் அந்த லாயர் பாத்திரம், அவரைப் பொறுத்தவரை ஒரு சாதனை. உணர்ச்சிகளை முகத்தால் வெளிக்காட்டாமல், 'மூவ்மெண்ட்'களின் மூலம் மட்டுமே வரவழைத்திருப்பது புதிய விஷயம்.

இன்னொரு புதிய விஷயம் அந்த டெலிபோன் பாட்டு. மெல்லிய நகைச்சுவையுடன் fast forwardல் காட்டப்படுகிற சாப்ளின் மூவ்மெண்ட்களுக்கான லைட்டிங் கொஞ்சம் மாறுதலாக இருக்கிறது.

சின்ன வயதில் பிரிந்து விடுகிற இரட்டைக் குழந்தைகள், கிளைமாக்ஸில் சேரும் விஷயம் புராதனமானது.

முன்பாதியில் அசாத்திய வேகம் காட்டுகிற இயக்குநர், பின்னால் சற்று சோர்ந்து விடுவதைக் குறிப்பிட வேண்டும்.

குறிப்பாக அந்த கோர்ட் சீன். போதை மருந்து கடத்துபவனை, வக்கீல், தன் வாதத்தால் மீட்டு, வெளிக் கொணருகிறார் என்பது சுலப சாத்தியமல்ல. எப்படி வெல்கிறார் என்பது சொல்லப்பட வேண்டாமோ?

ஆங்காங்கே வசனம் பலவீனப்பட்டு இசையும் தேய்ந்து விடுகிறதால் நடுவில் அபாரத் தொய்வு.

மீண்டும் நிமிரச் செய்வது சண்டைக் காட்சிகள். அவை வழக்கமான முரட்டுத்தனத்துடன் இல்லாமல் நளினமாக அமைந்திருப்பது ஜோர்.

பாடல்களில் ஹிந்தி வாசனை அடித்தாலும் கேட்க முடிகிறது. 'ஏ ஷப்பா' (கரெக்டா?) முணுமுணுக்க வைக்கிறது.

ஒட்டுமொத்த படத்தை நோக்க, வித்தியாசமாக ஏதும் செய்ய அர்ஜுன் ஆசைப்படுவது புரிகிறது. தீனி போட இயக்குநர்கள் தயாராவார்களாக.

— ஆர்.பி.ஆர்.



ஒரு ஊர் என்றால் கண்டிப்பாய் பைத்தியங்கள் இருந்தாக வேண்டும் என்று ஏதாவது சட்டம் இருக்கிறதா? யோசித்தான் மணி. பைத்தியம் என்று யோசிக்கவே கஷ்டமாய் இருந்தது அவனுக்கு. அது அவர்களைக் கேவலப்படுத்தும் ஒரு வார்த்தையாய், மனிதாபிமானமற்ற பெயராய்த் தோன்றியது. மனநிலை பாதிக்கப்பட்டவர், மனமுறிவாளர் என்று எத்தனையோ ஆரோக்கியமான வார்த்தைகள். மணி வேதனையுடன் அவற்றை உச்சரித்தான்.

இந்த ஊரிலும் ஒரு மனநோயாளர் இருப்பது சங்கடம் தரும் விஷயம். முதல் பார்வையில் அது ஆணா, பெண்ணா என்று கண்டுபிடிப்பது கஷ்டம். மனமுறிவாளர் என்ற வருத்தம் ஒருபுறமிருக்க, அது பெண் என்கிற வருத்தம் மணியை இன்னும் தாக்கியது. என்ன சோகமோ, எப்படி மனமுறிவு ஏற்பட்டதோ தெரியவில்லை, உடல் நிறைய துண்டுத் துணிகளைச் சுற்றிக் கொண்டு திரிந்தது. எங்கிருந்துதான் இத்தனை துண்டுத் துணிகள் கிடைக்குமோ, எப்படித்தான் சேகரிக்குமோ தெரியவில்லை. ஒழுங்கற்ற முறையில் மார்பிலும் இடுப்பிலும் துணி மூட்டைகள். அப்புறம் கையில் ஒரு துணி மூட்டை. அவளது எடையை விட, துணிகளின் எடை நிச்சயம் அதிகமாயிருக்கும். இந்தத் துணிகளைச் சுமந்து கொண்டு எப்படி இந்த ஊருக்கு வந்து சேர்ந்ததென்றும் தெரியவில்லை. எங்கிருந்து வந்ததென்றும் தெரியவில்லை.

முதன் முதலில் சேவியர் சார்தான் அடையாளம் காட்டினார் இந்த ஜீவனை. மணிக்கு அப்போது வகுப்புகள் இல்லை. நோட்ஸ் ஆப் லெசன் எழுதிக் கொண்டிருந்தான். பார்ப்பது லீவ்ப்ளேஸ்தான் என்றாலும், வேலை பளு ஒன்றும் குறைச்சல் இல்லை. சேவியர் சார் அருகில் வந்து, "மணி, நம்ம ஊருக்குப் புது வி.ஐ.பி. ஒண்ணு வந்திருக்கு பாரேன்..." என்றார். மணி புரியாமல் விழித்தான்.

"அட, திரும்பித்தான் பாரேன்..."

ஜன்னல் வழியே பார்த்தான். துணிகள் சுற்றப்பட்ட உருவம். அழுக்கு பாசி போல் தேகத்தைத் தீண்டியிருந்தது. முடிச்சு முடிச்சாய்க் கூந்தல்.

"இந்தப் பைத்தியங்களைப் புரிஞ்சுக்கவே முடியலை மணி. சிலது ட்ரஸ் எல்லாம் அவுத்துப் போட்டு அலையுது. எங்க தெருல ஒருத்தன் இருந்தான். எது கொடுத்தாலும் அவுத்துப் போட்டுருவான். இவளப் பாரு, ஒரு ஊருக்கே துணி கொடுக்கலாம் மாதிரி, உடம்பெங்கும் துணி. என்னன்னு சொல்ல! மணி, நான் நினைக்கறேன், எவனோ ரேப் பண்ணறதுக்காக, துணிய எல்லாம் உருவியிருப்பான். அதுலர்ந்து துணிகள் மேல ஒரு மோகம். ஒரு வெறி... என்ன சொல்ற நீ...?"

மணி பதில் சொல்லாமல் அவளையே பார்த்தான். கண்கள் எங்கோ வெறித்திருக்க, இந்தப் பி[illegible] பஞ்சத்தில் அவள் மட்டுமே இருக்[illegible]கிற மாதிரி உட்கார்ந்திருந்தாள். ந[illegible] யார்? உன் சொந்தம், சுற்றம் யார்? ஆண்டவனின் அன்புக் குழந்தையா நீ? அவரின் அருகில் அமர்ந்து, மானசீகமாகப் பேசிக் கொண்டிருக்கிறாயா நீ?

தொடர்ந்து சேவியர் பைத்தியம், மெண்டல், நட்டு மற்றும் மரை கழன்ற கேஸ் என்றெல்லாம் பட்டியல் போட்டுக் கொண்டிருந்தார். சின்னக் குழந்தைகள் பயப்படுகிறார்கள். எனவே, இவளைக் கல்லால் அடித்தோ, துப்பாக்கியால் சுட்டோ கொன்று விடுவது நல்லது... மணி பொறுக்க முடியாமல், ஆனால் நிதானமாகச் சொன்னான்.

"சார், எல்லாருமே பைத்தியங்கள்தான். எந்த அளவுங்கறது நமக்கு மட்டுமே தெரிஞ்ச விஷயம். இன்னும் சொல்லப் போனா, உலகத்துக்கு, பைத்தியம் - பைத்

செ. சங்கர்பாபு

தியம். பைத்தியத்துக்கு உலகம் பைத் தியம்..."

இன்றும் அந்தப் பெண் அங்கு தான், அந்த மரத்தடியின் கீழ்தான் உட்கார்ந்திருந்தாள். பள்ளிக்கூடத்துப் பியூன் அவளைப் பலமுறை எச்சரித் தும் அவள் அங்கிருந்து நகர மறுத்து விட்டதாய் மணி கேள்விப்பட்டிருந் தான். அந்த மரத்தடியில் அப்படி என்ன இருக்கிறது என்று தெரிய வில்லை. என்ன இருக்கிறது கடி எறும்புகளைத் தவிர? கடவுளே, எறும்புகள் அவளைக் கடித்துக் கொண்டிருக்குமே.

மணியின் தேகத்தில் எறும்புகள் கடித்தன. சட்டெ னத் தோல் நிறம் மாறியது. கடுக்கத் துவங்கியது.

வேறென்ன மரத்தடியில் இருக்கின்றன? தேள்? பூராண், பெயர் தெரியாத விஷப் பூச்சிகள்... பாம்பு கூட இருக்கலாம்.

மணி இமைக்கிற நேரத்தில் தேளாலும், பூராணா லும், விஷப் பூச்சிகளாலும், பாம்பாலும் தாக்கப்பட் டுத் தவித்தான்.

"பெல் அடிச்சிருச்க. போகலியா நீங்க..?" என்றான் பியூன். மணி விஷப் பூச்சிகளை உதறி விட்டு வகுப்பை நோக்கிச் சென்றான்.

# ஒப்பாஞ்.....

பாடம் எதுவும் நடத்த வேண்டியதில்லை. திருத்தப்பட்ட தேர்வுத் தாள்களைக் கொடுக்க வேண்டியிருந்தது. மாணவர்களிடம் அமைதியாக டோட்டலைச் சரிபார்க்கும்படி மணி கேட்டுக் கொண்டான். வகுப்பில் நிசப்தம் நிலவியது. சில நொடிகளில் நிசப்தத்தில் கல்லெறிந்தது, சேவியரின் குரல். பக்கத்து வகுப்பில் அவர் கத்திக் கொண்டிருந் தார். "எவனுமே சொல்றதை ஒழுங்காகச் செய்யற தில்லை. காட்டுக் கத்தல் கத்தி என்ன புண்ணியம்? ஹோம் வொர்க் செய்யாதவங்க எந்திரிங்க... லீடர், பிரம்பை எடு..."



நீளமான பிரம்பைக் காற்றில் உதறிய போது எழுந்த ஒலி அச்சம் தருவதாக இருந்தது. சேவியர் பிரம்பால் மாணவர்களைத் தாக்கினார்.

மணி தனது உள்ளங்கையில் வலியை உணர்ந் தான். கை சிவந்து போயிற்று. ஒரு அடி விழுந்து வலி துவங்குமுன் இன்னொரு அடி விழுந்தது.

சேவியர் ஓய்ந்தார்.

மணி தன் உள்ளங்கையை உதறிக் கொண்டான். அடி வாங்கியவர்களுக்காகப் பரிதாபப்பட்டான். பிரம்பை விட அன்பு பிரதானமானது. இனிய சொற் களின் பலத்தின் முன் எது ஜெயிக்க முடியும்? சேவி யர் சாரிடம் இது பற்றி முன்பே சொல்லியாகி விட் டது. இப்படி அடிக்க வேண்டுமா? இது பாவமில் லையா? அடித்து ஒருத்தனைத் திருத்தி விட முடி யுமா? கொஞ்சம் அன்பான வார்த்தைகளை உபயோ கித்துப் பார்க்கலாமே. இதைத்தான் புத்தர், ஏசு, காந்தி...

அடுத்த கணம் மணி தனது சொந்த வேலையை மட்டும் பார்க்கும்படி சேவியரால் கேட்டுக் கொள் ளப்பட்டான்.

இந்தச் சம்பவத்தை நினைத்தவாறே மணி ஜன்னல் பக்கமாகத் திரும்பினான். மாணவர்கள்

சந்தோஷமாக விளையாடிக் கொண்டிருந் தார்கள். சிலர் ஐஸ் சாப்பிட்டுக் கொண் டிருந்தார்கள். திடீரென... மணியின் தேகத் தின் மீது ரயில் விரைந்தது.

அந்தப் பெண்ணைச் சில மாணவர்கள் கல்லால் அடித்துக் கொண்டிருந்தார்கள். அவன் தன் கரிய முகத்தின் வாயிலாகப் பல் வேறு அதிர்ச்சிகளை வெளிப்படுத்தி, மாணவர்களைப் பார்த்து மண் அள்ளி வீசினான். மண் வீச்சு மாணவர்களுக்கு உத்வேகம் தர, பதிலுக்கு அவர்களும் மண் அபிஷேகம் செய்யத் துவங்கினார்கள். ஒருவன் தன் பேனாவைத் திறந்து இங்க்கை அவள் மேல் ஊற்றினான்.

மணியின் முகத்தில் இங்க் வழிந்தது.

பீரியட் முடிந்ததற்கான மணிச் சப்தம் கேட்டவுடன் மணி எழுந்தான். தலை நிறைய மணலும், முகத்தில் இங்க்கும், அவை தந்த வேதனையுடன் மாணவர்களை நோக்கிச் சென்றான். அவர்களும் வகுப்ப றையை நோக்கி வந்து கொண்டிருந்தார்கள். மணி தன் ஆத்திரத்தை அடக்கிக் கொண்டு "இங்க வாங்கடா..." என்றான்.

"..................."

"அங்க என்னடா பண்ணீங்க?" என்றான் திசையைக் காட்டி.

"சும்மா விளையாட்டுக்கு சார்...."

"எது? இதா விளையாட்டு? அதுவும் நம்மள மாதிரி ஒரு ஜீவன்டா. அடுத்தவன் படற துடிப்பு, வேதனையைக் கொஞ்சம் நினைச்சுப் பாருங்க. அதுக்கும் நம்மள மாதிரிதான் ரத்தம் ஓடுது. உன்னக் கல்லால அடிச்சா எப்படியிருக்கும்...?"

மணி பிற உயிர்களின் துன்பத்தை, அந்த ஆத்மாக்களின் பரிதவிப்பை இன்னும் விளக்கிச் சொல்லுமுன் அந்தக் குறுக்கீடு நேர்ந்தது. ஹெட் மாஸ்டர்...!

"சரி சரி, போங்க. இன்னும் யாரையும் துன்புறுத்தாதீங்க..." என்றான் மணி அவசர முடன். ஹெட் மாஸ்டர் வருவதற்குள் இவர் கள் இங்கிருந்து போய் விட்டால் நல்லது. இல்லையென்றால் என்ன விஷயம் என்று கேட்பார்.

இதற்கு முன்னால் கேட்டிருக்கிறார். இரண்டு மாணவர்கள் பட்டாம்பூச்சி பிடித்து, நூல் கட்டி பறக்க விட்டதைப் பார்த்த மணி, தனது சிறகுகள் பிடுங்கப்பட்ட வேதனையுடன் அவர்களை அழைத்து ஜீவ காருண்யத்தை விளக்கிக் கொண்டிருந்த போது ஹெட்மாஸ்டர் பார்த்து விட்டார்.

"மணி, கொஞ்சம் ரூமுக்கு வாங்க..."

"சின்னப் பசங்க, பாவம் விளையா டிட்டுப் போறாங்க. நாம நம்ம சின்ன வயசுல விளையாடலை?"

"நான் விளையாடலை..." என்றான் மணி.

"இந்த வயசுல விளையாடாம எப்போ விளையாடப் போறாங்க? அதுக்கு அவங் களுக்கு இத்தனை வசவு தேவையா? ஏதோ அவங்க கொலைக் குத்தம் செஞ்சிட்ட மாதிரி... நானும் பாத்திட்டிருக்கேன், பதி னைஞ்சு நிமிஷம் திட்டியிருக்கீங்க, நீங்க..."

"திட்டலை சார். அட்வைஸ்..."

"உங்க வேலை எதுவோ, அத மட்டும் பாருங்க மணி. நீங்க லீவ் வேகன்ஸில வந்திருக் கீங்க. இன்னும் பத்துப் பதினைஞ்சு நாள் வேலை பாக்கப் போறீங்க. அதுக்குள்ள உங் களுக்கு எதுக்கு இதெல்லாம்...? ஸ்டூடன்ட்ஸ் கிட்டே நல்ல பேர் வாங்க முயற்சி பண் ணுங்க..."

"பிற உயிர்களுக்கு மனசால கூட துன்பம் நினைக்கக் கூடாதுன்னு சொல்லிக் கொடுக் கறது தப்பா சார்?"

ஹெட் மாஸ்டர் வியப்புடன் அவனைப் பார்த்தார்.

"மணி, உங்க மென்மையான, பிறருக்குக் கெடுதல் நினைக்காத உள்ளத்தைப் பாராட் டறேன். ஆனால், யதார்த்தம் தவிர்க்க முடி யாதது. இப்ப, நீங்க ஒவ்வொரு கசாப்புக் கடை முன்னாலயும் நின்னு உயிர்களைக் கொல்லாதீங்கன்னு போராட முடியுமா? மணி, இப்படி இருந்தா அது உங்களுக்கு நல்லதில்ல. நம்ம கவலைப்பட்டு என்ன ஆகப் போறது? சரி... போகலாம் நீங்க... இனி மேல் உங்களுக்குத் தேவையில்லாத விஷயங் கள்ல தலையிடாதீங்க..."

மணி சாக்பீஸை உருட்டி விளையாடிக் கொண்டிருந்தான். அறிவுரைகளை விட ஆத்ம தவிப்பு பெரியது என்று சொல்லிக் கொண்டே மணி சாக்பீஸை உடைத்தான். "என்ன மணி, பீரியட் இல்லியா...?" என்ற வாறு சேவியர் சார் வந்தார்.

"இதான் கடைசி பீரியட்..."

"முடிஞ்சதா...? நேத்துதான் நீ வந்தது

**சேலத்துக்காரர்களே சிரிக்க வைக்கத் தயாரா?**

**உங்கள் மூளையின் தமாஷ் செல்களை தூசி தட்டி, பிரதி எடுத்து, கார்டில் நிரப்பி உடனே அனுப்புங் கள்! கோவை, தஞ்சை வாசி களுக்கு அப்புறம் சிறப்புப் பக்கங்களில் இடம்பிடிக்கப் போவது நீங்கள்தான். ஆரம் பித்தாயிற்றா?**

**— ஆசிரியர்**



# புதுப் புது அர்த்தங்கள்!

கவிதை

மன்மோகன்சிங் வரியைக் குறைத்தால்
"தேர்தல்" என்று அர்த்தம்!
மத்தியில் யாரும் அறிக்கை கொடுத்தால்
"அர்ஜுன்" என்று அர்த்தம்!

எடையின் அளவைக் குறைத்துப் போட்டால்,
ரேஷன் என்று அர்த்தம்!
எதற்கெடுத்தாலும் சத்தம் போட்டால்
சேஷன் என்றே அர்த்தம்! அர்த்தம்!

முடிவெடுக்காமல் தள்ளிப் போட்டால்
'திறமை' என்று அர்த்தம்!
நமது நாட்டில் குடிமகன் என்றால்
"பொறுமை" என்றே அர்த்தம்! அர்த்தம்!

- மரபின்மைந்தன். ம. முத்தையா

---

கார்னர்

**சிலந்தி வலை**

விருந்தாளிகளே
விருந்தாகும்
விடு.



**யாசகம்!**

''கருணையோடு வாரி வழங்குங்கள்.
என்னிடம் ஏதுமில்லை -
இந்தக் கூரிய கத்தி தவிர.''

- ஜி. எஸ். எஸ்.

மாதிரி இருக்கு. ரெண்டு மாசம் போனதே தெரியலை. லீவ் ப்ளேஸ்ல வேலை பார்த்தாலும், ரொம்ப சின்சியரா வேலை பாத்த நீ..."

மணி புன்னகைத்தான். சாயங்காலம் கனத்த இதயமுடன் பள்ளிச் சுவர்களை, கரும்பலகையை, ஜன்னல் வழியே பார்க்கும் அணில்களை விட்டுப் பிரிந்தான். இறுதி நிமிடத்தில் "வரேன்..." என்று மாணவர்களைப் பார்த்துச் சொல்லும் போது அவன் குரல் உடைந்து விட்டது.

இரவு தங்கராஜைப் பார்க்க வேண்டும். புண்ணியவான். அவன் இரண்டு மாதம் லீவ் போடப் போய் தன்னால் இங்கு வேலை பார்க்க முடிந்தது. இரண்டு மாதச் சம்பளம் என்பது லேசான விஷயமில்லை. நிறைய செலவுகளிலிருந்தும், நெருக்கடிகளிலிருந்தும் காப்பாற்றப் போகும் விஷயம். இந்தச் சிறிய வேலை வாய்ப்பு மட்டும் இல்லையென்றால் கண் விழி பிதுங்கியிருக்கும். அவமானங்கள் அவனைச் சூழ்ந்திருக்கும்.

ஆள் அரவமற்ற சாலையில் தங்கராஜ் குறித்த நினைப்புகளுடன் மணி நடந்து கொண்டிருந்த போது எதிரில் டி.வி.எஸ். பிப்டியில் ஒருவர் வேகமாய் வந்து கொண்டிருந்தார். அது தங்கராஜா என்று ஆர்வமுடன் பார்த்தான். வேறு யாரோ. அந்த வேறு யாரோவின் வாகனம் தெரு முனையில் திரும்பும் போது, எதிர்பாராதவிதமாய் ஒரு மாருதி வெளிப்பட்டு... வேகமாய்... இரண்டு வாகனங்களும் திகைத்து, சட்டென பிரேக் பிடித்தன. மயிரிழையில் ரத்தம் சேமிக்கப்பட்டது.

மணி பீதியுடன் அதைப் பார்த்துக் கொண்டிருந்த போது அந்த டி.வி.எஸ்ஸில் இருந்தது தங்கராஜாக இருக்கக் கூடாதா என்ற எண்ணம் பிறந்தது. அது தங்கராஜ். வாகனங்கள் மோதி ரத்தம் ஒடுகிறது. தங்கராஜால் பள்ளிக்கூடத்திற்கு வர முடியவில்லை. லீவ் ப்ளேஸ். மணி அவருக்குப் பதில் வேலை பார்க்கிறான். சம்பளம், செலவுகள், நெருக்கடிகள், நிம்மதி, அவமான அழிப்புகள், ஆசுவாசமாய் தினங்கள்.

சட்டெனக் கூடிய கூட்டத்தின் சப்தம் மணியைச் சுயநினைவுக்குக் கொண்டு வந்தது. தன் சிந்தனையின் வீழ்ச்சி அவனுக்கு அச்சம் தருவதாக இருந்தது. துணி மூட்டைகள் அணிந்த பெண்ணை, சிறகிழந்த பட்டாம்பூச்சியைப் பார்த்தது, பரிதாபப்பட்டது நான்தானா? இங்கே தங்கராஜை ரத்த வெள்ளத்தில் ஆழ்த்திக் கொண்டிருக்கிறேன். மணி கொஞ்ச நேரம் மௌனமாய், கலைந்து செல்லும் கூட்டத்தைப் பார்த்தான். தனது சிந்தனைகள் அவனுக்கே சோகம் தருவதாய் இருந்தன. யதார்த்தம் தவிர்க்க முடியாதது என்று ஹெட்மாஸ்டர் சொன்னது நினைவுக்கு வந்தது.

# அமரர் கல்கி

# பார்த்திபன் கனவு

## 22. "நிஜமாக நீதானா?"

மரத்தடியில் வந்து நின்ற குந்தவிதேவி சற்று நேரம் அப்படியே நின்று கொண்டிருந்தாள். விக்கிரமன் திரும்பிப் பார்க்கும் வழியாக இல்லை. காவேரியின் நீர்ப் பிரவாகத்திலிருந்து அவன் கண்களை அகற்றவில்லை. ஒரு சிறு கல்லை எடுத்து விக்கிரமனுக்கு அருகில் ஜலத்தில் போட்டான். 'கொடக்' என்ற சப்தத்துடன் கல் அப்பிரவாகத்தில் விழுந்து முழுகிற்று. சிறு நீர்த் துளிகள் கிளம்பி விக்கிரமன் மேல் தெறித்தன.

குந்தவியின் யுக்தி பலித்தது. விக்கிரமன் திரும்பிப் பார்த்தான். அவனுடைய கண்கள் அகல விரிந்தன. கண் கொட்டாமல் அவளைப் பார்த்துக் கொண்டேயிருந்தான். கண்களாலேயே அவளை விழுங்கி விடுபவன் போல் பார்த்தான். அவனுடைய உதடுகள் சற்றுத் திறந்தன. ஏதோ பேச யத்தனிப்பது போல். ஆனால், வார்த்தை ஒன்றும் வரவில்லை.

ஒரு பெருமூச்சு விட்டு விட்டு மறுபடியும் திரும்பிக் காவேரியின் பிரவாகத்தை நோக்கினான்.

குந்தவி இன்னும் சற்று நேரம் நின்றாள். பிறகு மரத்தடியிலிருந்து வந்து நதிக்கரையில் விக்கிரமனுக்குப் பக்கத்தில் உட்கார்ந்தாள்.

அவள் உட்கார்ந்த பிறகு விக்கிரமனும் இரண்டு மூன்று தடவை அவள் பக்கம் திரும்பினான். ஒவ்வொரு தடவையும் சற்று நேரம் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்து விட்டு வேறு பக்கமாக முகத்தைத் திருப்பிக் கொண்டான்.

சிறிது நேரத்துக்குப் பிறகு குந்தவி, "நான் போகிறேன்" என்று சொல்லிக் கொண்டு எழுந்திருந்தாள்.

விக்கிரமன் மிகவும் அதிசயமடைந்தவனைப் போல் அவளைத் திரும்பிப் பார்த்து, "நீ பேசினாயா?" என்று கேட்டான்.

"ஆமாம். நான் ஊமையில்லை!" என்றாள் குந்தவி.

குன்றாத அதிசயத்துடன் விக்கிரமன் அவளைப் பார்த்துக் கொண்டேயிருந்தான். குந்தவி மறுபடியும் போகத் தொடங்கினாள்.

"ஏன் போகிறாய்?" என்றான் விக்கிரமன் தழுதழுத்த குரலில்.

"நீர் பேசுகிற வழியைக் காணோம். அதனால்தான் கிளம்பினேன்" என்று சொல்லிக் கொண்டே குந்தவி மறுபடியும் விக்கிரமனுக்கு அருகில் வந்து உட்கார்ந்தாள்.

"எனக்குப் பயமாயிருந்தது!" என்றான் விக்கிரமன்.

"என்ன பயம்? ஒரு அபலைப் பெண்ணைக் கண்டு பயப்படுகிற நீர் தனி வழியே கிளம்பலாமா?"

"உன்னைக் கண்டு பயப்படவில்லை."

"பின்னே?"

"நான் காண்பது கனவா அல்லது ஜுர வேகத்தில் தோன்றும் சித்தப்பிரமையா என்று நினைத்தேன். பேசினால் ஒரு வேளை பிரமை கலைந்து விடுமோ என்று பயந்தேன்."

குந்தவி புன்னகையுடன், "இப்பொழுது என்ன தோன்றுகிறது? கனவா, பிரமையா?" என்றாள்.

"இன்னமும் சந்தேகமாய்த்தானிருக்கிறது. நீ கோபித்துக் கொள்ளாமலிருந்தால்...?"

"இருந்தால் என்ன?"

"நிஜமாக நீதானா என்று உறுதிப்படுத்திக் கொள்வேன்."

இவ்விதம் சொல்லி விக்கிரமன் தன்னுடைய கையைக் குந்தவியின் கன்னத்தின் அருகே கொண்டு போனான். ஜுரக் கனவுகளில் நிகழ்ந்தது போல் அந்த முகம் உடனே மறைந்து போகவில்லை. குந்தவி தன் முகத்தைத் திருப்பிக் கொள்ளவும் இல்லை. விக்கிரமனுடைய உள்ளங்கை, மலரின் இதழ் போல் மென்மையான குந்தவியின் கன்னத்தைத் தொட்டது. பிறகு, பிரிய விருப்பமில்லாதது போல் அங்கேயே இருந்தது. குந்தவி அந்தக் கையைப் பிடித்து அகற்றி, பழையபடி அவனுடைய மடிமீது வைத்தாள்.

புன்னகையுடன், "உம்முடைய சந்தேகம் தீர்ந்ததா? நிச்சயம் ஏற்பட்டதா?" என்றாள்.

"சந்தேகம் தீர்ந்தது! பல விஷயங்கள் நிச்சயமாயின" என்றான் விக்கிரமன்.

"என்னென்ன?"

"நிஜமாக நீதான் இங்கே உட்கார்ந்திருக்கிறாய் - வெறும் பிரமையோ கனவோ அல்ல என்பது ஒன்று."

"அப்புறம்?"

"நீ கையினால் தொட முடியாத தெய்வ கன்னிகையல்ல; உயிரும் உணர்ச்சியுமில்லாத தங்க விக்கிரகமும் அல்ல; சாதாரண மானிடப் பெண்தான் என்பது ஒன்று."

"இன்னும் என்ன?"

"இனிமேல் உன்னைப் பிரிந்து உயிர் வாழ்வது எனக்கு அசாத்தியமான காரியம் என்பது ஒன்று."

குந்தவி வேறு பக்கம் திரும்பிக் கண்களைத் துடைத்துக் கொண்டாள். பிறகு விக்கிரமனைப் பார்த்து, "என்னை உமக்கு ஞாபகம் இருக்கிறதா?" என்று கேட்டாள்.

"ஞாபகமா? நல்ல கேள்வி கேட்டாய்! உன்னைத் தவிர வேறு எந்த ஞாபகமாவது உண்டா என்று கேட்டிருந்தால் அதிகப் பொருத்தமாயிருக்கும். பகலிலும், இரவிலும், பிரயாணத்திலும், போர்முனையிலும், கஷ்டத்திலும், சுகத்திலும் உன் முகம் என் மனத்தை விட்டு அகன்றதில்லை. மூன்று வருஷ காலமாக நான் எங்கே போனாலும், எது செய்தாலும், என் இருதய அந்தரங்கத்தில் உன் உருவம் இருந்து கொண்டுதானிருந்தது...."

"என்ன சொல்கிறீர்? நான் உம்மை மாமல்லபுரத்து வீதியில் சந்தித்துப் பத்து நாள்தானே ஆயிற்று? மூன்று வருஷமா...?" என்றாள் குந்தவி கள்ளச் சிரிப்புடனும் அவநம்பிக்கையுடனும்.

விக்கிரமன் சற்று நேரம் திகைத்துப் போய் மௌனமாயிருந்தான்.

பிறகு, "ஓஹோ! பத்து நாள்தானா ஆயிற்று?" என்றான்.

"பின்னே, மூன்று வருஷம் ஜுரம் அடித்துக் கிடந்தீரா?"

"சரிதான்; ஜுரத்தினால்தான் அத்தகைய பிரமை எனக்கு உண்டாயிருக்கிறது. உனக்கும் எனக்கும் வருஷக்கணக்கான சிநேகம் என்று தோன்றுகிறது!"

"ஒருவேளை மாமல்லபுரத்து வீதியில் என்னைப் பார்த்ததற்கு முன்னாலேயே எப்போதாவது பார்த்த ஞாபகம் இருக்-





கிறதோ?" என்று குந்தவி கேட்டாள்.

விக்கிரமன் சற்று யோசித்து, "எனக்கு இன்னும் நல்ல ஞாபக சக்தி வரவில்லை. மனம் குழம்பியிருக்கிறது. அதிலும்....'' என்று தயங்கினான்.

"அதிலும் என்ன?" என்று கேட்டாள் குந்தவி.

''அதிலும் உன்னுடைய நீண்ட கரிய விழிகளைப் பார்த்தேனானால் நினைவு அடியோடு அழிந்து போகிறது. என்னையும், நான் வந்த காரியத்தையும், இவ்வுலகத்தையும் எல்லாவற்றையுமே மறந்து விடுகிறேன்! வருஷம், மாதம், நான் எல்லாம் எங்கே ஞாபகம் இருக்கப் போகிறது?"

"உமக்கு இன்னும் ஜுரம் குணமாகவில்லை. அதனால்தான் இப்படிப் பிதற்றுகிறீர். நீர் இங்கே தனியாக வந்திருக்கக் கூடாது."

''இல்லை; எனக்கு ஜுரமே இப்போது இல்லை. நீ வேணுமானால் என் கையைத் தொட்டுப் பார்!" என்று விக்கிரமன் கையை நீட்டினான்.

குந்தவி கையை லேசாகத் தொட்டுவிட்டு, ''அப்பா, கொதிக்கிறதே!'' என்றாள்.

''இருக்கலாம்; ஆனால் அது ஜுரத்தினால் அல்ல..."

"இருக்கட்டும்; கொஞ்சம் என் கண்களைப் பாராமல் வேறு பக்கம் பார்த்து ஞாபகப்படுத்திக் கொண்டு சொல்லும். நீர் யார், எங்கிருந்து வந்தீர் என்பதாவது ஞாபகம் இருக்கிறதா? எல்லாமே மறந்து போய் விட்டதா?" என்று குந்தவி கேட்டாள்.

"ஆமாம்; இங்கே வந்து நதிக்கரையில் உட்கார்ந்து அதையெல்லாம் ஞாபகப் படுத்திக் கொண்டேன்.

செண்பகத் தீவிலிருந்து கப்பலில் வந்தேன். இரத்தின வியாபாரம் செய்வதற்காக...."

"மாமல்லபுரத்து வீதியில் என்னைப் பார்த்த விஷயமும் ஞாபகம் இருக்கிறதல்லவா?"

"இருக்கிறது."

"அரண்மனைக்கு வாரும்; சக்கரவர்த்தியின் மகள் இரத்தினம் வாங்குவாள், என்று சொன்னேனே, அது நினைவிருக்கிறதா?"

"இப்போது நினைவு வருகிறது."

"நீர் ஏன் அரண்மனைக்கு வரவில்லை? ஏன் சொல்லாமல் கிளம்பி இரவுக்கிரவே தனி வழி நடந்து வந்தீர்?"

விக்கிரமன் சற்று நிதானித்து "உண்மையைச் சொல்லட்டுமா?" என்று கேட்டான்.

"இரத்தின வியாபாரிகள் எப்போதாவது உண்மையைச் சொல்லும் வழக்கம் உண்டு என்றால் நீரும் உண்மையைச் சொல்லும்."

"சத்தியமாய்ச் சொல்லுகிறேன். உன்னை இன்னொரு தடவை பார்த்தேனானால், மறுபடியும் உன்னைப் பிரிந்து வருவதற்கு மனம் இடங்கொடாது என்ற காரணத்தினால்தான். அது ரொம்பவும் உண்மையான பயம் என்று இப்போது தெரிகிறது...."

"செண்பகத் தீவில் இப்படியெல்லாம் புருஷர்கள் பெண்களிடம் பேசி ஏமாற்றுவது வழக்கமா? இதை அங்கே ஒரு வித்தையாகச் சொல்லிக் கொடுக்கிறார்களா?" என்று குந்தவி ஏளனமாகக் கேட்டாள்.

"நீ ஒன்றை மறந்து விடுகிறாய். நான் செண்பகத் தீவிலிருந்து வந்தேனென்றாலும், நான் பிறந்து வளர்ந்ததெல்லாம் இந்தச் சோழ நாட்டில்தான். இந்தப் புண்ணியக் காவேரி நதியின் கரையில்தான் நான் ஓடியாடி விளையாடினேன். இந்த நதியின் பிரவாகத்தில்தான் நீந்தக் கற்றுக் கொண்டேன். இந்த அழகிய சோழ நாட்டின் குளிர்ந்த மாந்தோப்புகளிலும் தென்னந் தோப்புகளிலும் ஆனந்தமாக எத்தனையோ நாட்கள் உலாவினேன்! ஆகா! நான் செண்பகத் தீவிலிருந்த நாட்களில் எத்தனை நாள் இந்த நாட்டை நினைத்துக் கொண்டு பெருமூச்சு விட்டேன்! இந்தக் காவேரி நதிதீரத்தை நினைத்துக் கொண்டு எத்தனை முறை கண்ணீர் விட்டேன்! மறுபடியும் இந் நாட்டைக் காணவேண்டுமென்று எவ்வளவு ஆசைப்பட்டேன்!.... அந்த ஆசை இப்போது நிறைவேறியது; உன்னால்தான் நிறைவேறியது! உனக்கு என்ன கைம்மாறு செய்யப் போகிறேன்?" என்று விக்கிரமன் ஆர்வத்துடன் கூறினான்.

"எனக்கு நீர் நன்றி செலுத்துவதில் என்ன பிரயோஜனம்? உண்மையில் நீர் நன்றி செலுத்த வேண்டியது கோமகள் குந்தவிக்கு...."

"யார்...?"

"சக்கரவர்த்தியின் மகள் குந்தவி தேவியைச் சொல்லுகிறேன். உம்மை இங்கே அழைத்து வருவதற்கு அவர்தானே அனுமதி தந்தார்? அவருக்குத்தான் நீர் கடமைப்பட்டிருக்கிறீர்."

"அப்படியா? எனக்குத் தெரிய வேண்டிய விஷயங்கள் இன்னும் எவ்வளவோ இருக்கின்றன. என் மனம் ஒரே குழப்பத்தில் இருக்கிறது. இந்த இடத்துக்கு நான் வந்து சேர்ந்திருக்கிறேன்; காவேரி நதிக்கரையில் உட்கார்ந்திருக்கிறேன் என்பதை நினைத்தாலே ஒரே ஆச்சரியக் கடலில் மூழ்கி விடுகிறேன். வேறு ஒன்றிலும் மனம் செல்லவில்லை. நான் எவ்விதம் இங்கு வந்து சேர்ந்தேன் என்பதை விவரமாய்ச் சொல்ல வேண்டும். முதலில், நீ யார், உன் பெயர் என்னவென்று தெரிவித்தால் நல்லது."

"மாமல்லபுரத்தில் சொன்னேனே, ஞாபகம் இல்லையா?"

"உன்னைப் பார்த்த ஞாபகம் மட்டுந்தான் இருக்கிறது; வேறொன்றும் நினைவில் இல்லை."

"என் பெயர் ரோகிணி. சக்கரவர்த்தித் திருமகள் குந்தவி தேவியின் தோழி நான்."

உண்மையில், அந்தச் சந்திப்பின் போது குந்தவி தன் பெயர் மாதவி என்று சொன்னாள். அவசரத்தில் சொன்ன கற்பனைப் பெயர் ஆனதால் அவளுக்கே அது ஞாபகமில்லை. இப்போது தன் பெயர் 'ரோகிணி' என்றாள்.

அதைக் கேட்ட விக்கிரமன் சொன்

## அருள்வாக்கு

தன்னை மட்டும் கடைத்தேற்றிக் கொள்வது ஸ்வய நலமில்லையா என்று கேட்டால், இல்லவே இல்லை. ஸ்வயம் என்பது எது? நீ ஒரு ஜீவன் என்று வைத்துக்கொண்டு அதற்காகப் பொன்னும் பொருளும், இன்னும் பதவி, பட்டம் முதலானதுகளும் சேர்த்துக் கொள்வதே குறியாயிருப்பதுதான் ஸ்வயநலம். இது கூடவே கூடாதுதான். இதிலெல்லாம் பிறருக்குத் தியாகமாக விட்டுக் கொடுக்க வேண்டியதுதான். ஆனால் நீ ஆத்மாவாக மட்டும் இருந்து கொண்டு சும்மாவிருக்கிறாய் என்கிறபோதே ஸ்வயம், பரம் என்று சொல்லிக் கொள்ள எதுவுமே



**இல்லை! நான், நான் என்கிற ஜீவ பாவம் தானே ஸ்வயம் என்பது? அந்த ஸ்வயமே போய்விடும் இடத்தில் ஸ்வய நலம் எங்கேயிருந்து வரும்? ஸத்யமாகவும் நித்யமாகவும் உள்ள ஒன்றே ஒன்றான நிலையில் ஸ்வயம் என்பது செத்தேபோய்விடுவதாக இருக்க, அதை 'ஸ்வய நலன் பேணுவது' என்றால் சிரிப்புத்தான் வருகிறது!**

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.**

னான்:

"ரோகிணி! - என்ன அழகான பெயர்? - எத்தனையோ நான் அந்தச் செண்பகத் தீவில் நான் இரவு நேரத்தில் வானத்தைப் பார்த்துக் கொண்டிருந்ததுண்டு. பிறைச் சந்திரனுக்கு அருகில் ரோகிணி நட்சத்திரம் ஜொலிக்கும் அழகைப் பார்த்துப் பார்த்து மகிழ்ந்திருக்கிறேன். ஆனால், உன்னுடைய கண்களின் ஜொலிப்பிற்கு அந்த ரோகிணி நட்சத்திரத்தின் ஜொலிப்பு கொஞ்சமும் இணையாகாது."

"உம்முடைய வேஷத்தை நான் கண்டு பிடித்து விட்டேன்...." என்றாள் குந்தவி.

விக்கிரமன் சிறிது திடுக்கிட்டு, "வேஷமா?...." என்றான்.

"ஆமாம்; உண்மையில் நீர் இரத்தின வியாபாரி அல்ல. நீர் ஒரு கவி. ஊர் சுற்றும் பாணன். உம்முடைய மூட்டையில் இருந்தது இரத்தினம் என்றே நான் நம்பவில்லை!"

விக்கிரமன் சற்று பொறுத்துச் சொன்னான் : - "இப்போது உன்னை நம்பும்படி செய்ய என்னால் முடியாது. ஆனால் அந்த மூட்டையில் இருந்தவை இரத்தினங்கள் தான் என்று ஒருநாள் உனக்கு நிரூபித்துக் காட்டுவேன். நான் கவியுமல்ல. என்னிடம் அப்படி ஏதாவது திடீரென்று கவிதா சக்தி தோன்றியிருக்குமானால், அதற்கு நீதான் காரணம். உன்னுடைய முகமாகிய சந்திரனிலிருந்து பொங்கும் அமுத கிரணங்களினால்...."

"போதும், நிறுத்தும் உம்முடைய பரிகாசத்தை. இனிமேல் சகிக்க முடியாது" என்றாள் குந்தவி.

"பரிகாசமா?" என்று விக்கிரமன் பெருமூச்சு விட்டான். பிறகு, "உனக்குப் பிடிக்காவிட்டால் நான் பேசவில்லை. நான் எப்படி இங்கே வந்து சேர்ந்தேன் என்பதைச் சொன்னால் ரொம்பவும் நன்றி செலுத்துவேன்" என்றான்.

"காஞ்சியிலிருந்து உறையூர் வரும் பாதையில் மகேந்திர மண்டபம் ஒன்றில் ஜுர வேகத்தினால் பிரக்ஞை இழந்து நீர் கிடந்தீர். அங்கு எப்படி வந்து சேர்ந்தீர்? அதற்கு முன்னால் என்னென்ன நேர்ந்தது என்று நீர் சொன்னால், பிறகு நடந்ததை நான் சொல்லுகிறேன்."

விக்கிரமன் தனக்கு நேர்ந்ததையெல்லாம் ஒருவாறு சுருக்கமாகச் சொன்னான்.

எல்லாவற்றையும் கேட்டு விட்டுக் குந்தவி தேவி கூறினாள் :

"சக்கரவர்த்தியின் மூத்த குமாரர் மகேந்திரரும், குந்தவி தேவியும் காஞ்சியிலிருந்து உறையூருக்குப் பிரயாணம் செய்து கொண்டிருந்தார்கள். தேவியுடன் நானும் வந்தேன். அந்தக் காட்டாற்றைத் தாண்டி வந்த போது, மகேந்திர மண்டபத்துக்குள்ளிருந்து 'அம்மா அம்மா' என்று அலறும் குரல் கேட்டது. நான் அம்மண்டபத்துக்குள் வந்து பார்த்தேன். மாமல்லபுரத்தில் பார்த்த இரத்தின வியாபாரி நீர்தான் என்று அடையாளம் கண்டுகொண்டேன். பிறகு குந்தவி தேவியிடம் உம்மையும் அழைத்து வர அனுமதி கேட்டேன். அவர் கருணை செய்து சம்மதித்தார். உமக்கு உடம்பு பூரணமாகக் குணமாகும் வரையில் இங்கேயே உம்மை வைத்திருக்கவும் அனுமதித்திருக்கிறார்."

"ஜுரக் கனவுகளில் நான் அடிக்கடி உன்னுடைய முகத்தைக் கண்டேன். அதெல்லாம் கனவல்ல. உண்மையிலேயே உன்னைத்தான் பார்த்தேன் என்று இப்போது தெரிகிறது."

"இருக்கலாம்; நீர் ஜுரமடித்துக் கிடக்கையில் அடிக்கடி உம்மை நான் வந்து பார்த்தது உண்மைதான். இவ்வளவுக்கும் குந்தவி தேவியின் கருணைதான் காரணம்."

விக்கிரமன் ஏதோ யோசனையில் ஆழ்ந்தான். குந்தவி கேட்டாள் :

"சக்கரவர்த்தியின் மகளைப் பற்றி நான் இவ்வளவு சொல்கிறேன். ஒரு வார்த்தையாவது நீர் நன்றி தெரிவிக்கவில்லையே? அவ்வளவு கல் நெஞ்சமா உமக்கு?"

"பல்லவ குலத்தைச் சேர்ந்த யாருக்கும் நான் நன்றி செலுத்த முடியாது!"

"குந்தவி தேவியை நேரில் பார்த்தால் இப்படிச் சொல்ல மாட்டீர். பிறகு என்னைக் கூட உடனே மறந்துவிடுவீர்."

"சத்தியமாய் மாட்டேன். ஆயிரம் குந்தவி தேவிகள் உனக்கு இணையாக மாட்

# பட்டொளி வீசியது!

◆ கல்கியில் வெளியான மிகச் சிறந்த தொடர் நாவல்களில் ஒன்று ''மணிக்கொடி''. வன்முறை அகிம்சை ஆகிய இரண்டின் வழியாகவும் நமக்குச் சுதந்திரம் கிடைத்தது என்ற ஒரு பாத்திரத்தின் துணிச்சலான கூற்றை, வெகுவான விரிவான ஆய்வின் மூலம் ஆதாரபூர்வமாய் ஆசிரியர் ஜோதிர்லதா கிரிஜா இதில் எடுத்துக்காட்டி இருக்கிறார். விடுதலைப் போராட்டத்தைப் பின்னணியாய் அல்லாமல் முன்னணியாய்க் கொண்ட கதை இது. பின்னுரையில் இதற்கு விளக்கம் எதற்கு? ''மணிக்கொடி'' நாவல், இலக்கிய வானில் என்றும் பட்டொளி வீசிப் பறக்கும்.

சென்னை - 17, சுந்தா.

◆ மாணவனாக இராமகிருஷ்ணா மிஷன் உயர்நிலைப் பள்ளியில் படித்தபோது கேட்ட, மனத்தில் எழுந்த சுதந்திரப் போராட்ட நினைவுகள் மணிக்கொடி மூலம் மீண்டும் மலர்ந்தன.

திருச்சி, டாக்டர் கே. அழகப்பன்.

◆ அஞ்சனா, அமராவதி, பவித்ரா, கங்கா போன்ற கதாபாத்திரங்கள் மனத்திரையில் என்றும் நீங்காமல் பதிந்து விட்டனர்! லதாவின் ஓவியங்கள் அவர்களுக்கு உயிரூட்டின.

சென்னை - 78, டி.எஸ். நாராயணசுவாமி.

◆ மணிக்கொடி எழுதுவதற்காக ஆசிரியர் எத்தனை புத்தகங்களைப் படித்து எழுதி இருக்கிறார் என்பதை நினைக்கும்போது மிகவும் வியப்பாக இருக்கிறது. அதைப் படித்தவருக்கும் தேசப்பற்று ஏற்படும் என்பது நிச்சயம்.

பாளையம்கோட்டை, கே. ஜானகி.

◆ சுதந்திரப் போராட்டம் பற்றி பின்னர் எனது இரண்டு வயது மகள் கேட்கும் போது தெளிவாக எடுத்துக் கூற, ஜோதிர்லதா கிரிஜாவின் 'மணிக்கொடி' தொடரை இன்றே தொகுத்து வைத்து விட்டேன். அரிய பொக்கிஷம்! நன்றி.

சென்னை - 61, எம். நக்கீரன்.

◆ மணிக்கொடி முடிந்த பின்னும் மனத்தில் ஒரு வித சுமை விஞ்சி நின்றது. பவித்ராவை எண்ணும் போது கண் கலங்குகிறது. வீர அபிமன்யுவோடு ஒப்பிடலாம்.

நெய்வேலி - 1, ச. ஜெஸிந்தா ராணி.



டார்கள்! இருக்கட்டும்; இப்போது இந்த மாளிகையில் அவர்கள் இருவரும் இருக்கிறார்களா?"

"யார் இருவரும்?"

"அண்ணனும் தங்கையும்."

"யுவராஜா மகேந்திரர் இங்கே இல்லை. அவர் இரும்பவும் காஞ்சிக்குப் போய் விட்டார். சீன தேசத்திலிருந்து யாரோ ஒரு யாத்திரிகர் வந்திருக்கிறாராம். அவர் இந்தப் பாரத நாடு முழுவதும் யாத்திரை செய்து விட்டுக் காஞ்சிக்கு வருகிறாராம். 'யுவான் சுவாங்' என்ற விசித்திரமான பெயரையுடையவராம். சக்கரவர்த்திக்கு இச் சமயம் முக்கிய வேலை வந்திருப்பதால், அந்த யுவான் சுவாங்கை உபசரித்து வரவேற்பதற்காக யுவராஜா உடனே வர வேண்டுமென்று செய்தி வந்தது. இங்கு வந்த இரண்டாம் நாளே மகேந்திரர் புறப்பட்டுப் போய் விட்டார். பார்த்தீரா, எங்கள் பல்லவ சக்கரவர்த்தியின் புகழ் கடல்களுக்கப்பால் வெகு தூரத்திலுள்ள தேசங்களில் எல்லாம் கூடப் பரவியிருப்பதை? நீர் போயிருந்த நாடுகளில் எல்லாம் எப்படி?'' என்று கேட்டாள் குந்தவி.

"ஆம்; அங்கேயெல்லாம் கூட பல்லவ சக்கரவர்த்தியின் புகழ் பரவித்தான் இருக்கிறது."

"அப்படிப்பட்ட சக்கரவர்த்தியின் ஆளுகையில் இருப்பது இந்தச் சோழ நாட்டுக்குப் பெருமையில்லையா? இந்த நாட்டு அரசகுமாரன் பல்லவ சக்கரவர்த்திக்குக் கப்பம் கட்ட மறுத்து அந்தச் செண்பகத் தீவில் போய்க் காலம் கழிக்கிறானாமே? அது நியாயமா? உம்முடைய அபிப்பிராயம் என்ன?" என்று குந்தவி கேட்டு விக்கிரமனுடைய முகத்தை ஆவலுடன் நோக்கினாள்.

விக்கிரமன் அவளை நிமிர்ந்து நோக்கி, "என்னைப் பொறுத்தவரையில் நான் இந்தச் சோழ நாட்டில் அடிமையாயிருப்பதைக் காட்டிலும், செண்பகத் தீவில் சுதந்திரப் பிரஜையாக இருப்பதையே விரும்புவேன்" என்றான்.

"நிச்சயமாகவா? என் நிமித்தமாகக் கூட நீர் இங்கே இருக்க மாட்டீரா?" என்று குந்தவி கேட்ட போது விக்கிரமன் அவளை இரக்கத்துடன் பார்த்து, "அந்தகைய சோதனைக்கு என்னை உள்ளாக்க வேண்டாம்!" என்றான்.

இருவரும் ஒருவரையொருவர் அறிந்து கொண்டிருந்தார்கள். ஆனாலும் அறிந்து கொள்ளாதது போல் நடித்தார்கள். இந்த நாடகம் எத்தனை காலம் நீடித்திருக்க முடியும்!

(தொடரும்)


Hey! Look what I've got!


It's the latest GOKULAM!
Give it to me! I want to read it first!


Crazy! What's in that book?

கண்மாய்க் கரையை விட்டு இறங்கி செம்மண் பாதையில் நெடுந்தூரம் நடந்து விட்டோம். எங்கள் மௌனத்தை தூரத்து டெண்ட் கொட்டகையின் கோன் ஸ்பீக்கர்தான் கலைத்தது.

"நீ இப்படி கோவிச்சுக்கிட்டுப் பேசாம இருக்கறதுனால என்ன பிரயோஜனம்?" ரகு கேட்டான்.

பிரயோஜனமில்லை என்று எனக்குத் தெரியும். நிச்சயிப்பதற்கே அவர்கள் என்னைக் கேட்கவில்லை. இப்போது காரியங்கள் மளமளவென்று நடந்து கொண்டுதான் இருந்தன. ஐயரைப் பார்த்து அப்பா நாள் குறித்து விட்டார். பத்திரிகையில் யார் யார் பெயர்கள் வர வேண்டும், வரக் கூடாது என்று அம்மா ஒரு பக்கம் தீர்மானம் போட்டுக் கொண்டிருக்கிறாள்.

"இதை நிறுத்த முடியாதா?" என்று கேட்டேன்.

"அது ஒண்ணும் பெரிய காரியமில்லை. ஆனா அந்த பொண்ணோட நிலைமையை யோசிச்சுப் பாருடா."

"நிச்சயதார்த்தம்தானே முடிஞ்சிருக்கு."

"இருந்தாலும் ஒரு பொண்ணோட மனசுல ஆசையை விதைச்சுட்டு அப்புறம் மாட்டேன்னு சொன்னா அது பாவம்டா."

"நான் கட்டிக்க மாட்டேன்னு சொன்னா அந்த பொண்ணோட நிலை அது. கட்டிக் கிட்டா என் நிலைமை பத்தியும் யோசி."

"ப்ளஸ் டூ வரைக்கும் படிச்சிருக்கா. உனக்குத் தகுதியானவதான்."

"தகுதி பத்தியெல்லாம் நான் பேசலை. எனக்கு இப்ப கல்யாணம் வேண்டாம் அவ்வளவுதான்."

ரொம்ப நேரம் நடந்து வந்து விட்டதை உணர்ந்தோம்.

"எனக்கு ஒரு வழி சொல்லு ரகு."

நான் அவனிடம் வெறுமனே கேட்டேனேயொழிய என்ன செய்ய வேண்டும் என்று ஏற்கெனவே தீர்மானித்து விட்டேன். இது என் வாழ்க்கைப் பிரச்னை. மௌனமாக இருந்தால் பின்னால் நான்தான் இதன் பலன்களை அனுபவிக்க வேண்டிவரும்.

"சொல்லாம கொள்ளாம மெட்ராஸுக்குத் திரும்பப் போயிடறதுதான் ஒரே வழி..." என்றேன்.

"ஒரு பொண்ணை ஏமாத்தறது எனக்குச் சரின்னு படலை. யோசிச்சுப் பாரு."

யோசித்தேன். இரவு முழுவதும் தூங்காமல் யோசித்தேன்.

அந்தப் பெண்ணை ஏமாற்றுவது என் நோக்கமல்ல. அவளுக்கு நான் ஆசை காட்டவில்லை. எதற்காக அந்த பாவத்திற்காக நான் கவலைப்பட வேண்டும் என்றே தோன்றியது.

காலையில் எழுந்தபோது ரகு எனக்காகக் காத்திருந்தான்.

"என்னடா இவ்வளவு சீக்கிரமா வந்திருக்கே?" என்று ஆச்சரியமாய்க் கேட்டேன்.

"போரடிச்சுது. அதான்..." உட்கார்ந்தான்.



# .க.ல்.யா.ண.ச.....

குளித்து விட்டு வந்தேன்.

"என்ன முடிவு செஞ்சிருக்கே?" என்று கேட்டான்.

"ஓடிப் போக வேண்டியதுதான்."

"நிச்சயம் பண்ணி, தட்டிப் போனா அப்புறம் அந்தப் பொண்ணை ஊர்ல எவன் கட்டிக்குவான். நல்லமுத்து வாத்தியார் வீட்டுச் சங்கதி தெரியுமில்ல? துக்கம் தாங்காம நாண்டுக்கிட்டுச் செத்தாரு. உன்னால பாதிக்கப்படப் போறது யாருன்னு யோசிச்சியா?"

நான் மௌனமாக இருந்தேன்.

"கல்யாணத்துல உனக்கு அப்படி என்ன வெறுப்பு?"

"தெரியலை. நான் படிச்ச புஸ்தகமா, பார்த்த சினிமாவா, இல்ல என் அம்மா அப்பாவா, தெரியலை..."

"ஸ்ஸ்..." அவன் என்னைப் பேச விடாமல் தடுத்தான்.

"எங்க வீட்டுக்குப் போகலாம் கிளம்பு. அங்க போய் மீதியைப் பேசலாம்."

சாப்பிட்டுவிட்டு அவன் வீட்டுக்குச் சென்றோம். உள் ரூமில் அந்தப் பெண் இருக்கிறாள் என்பதைச் சட்டென்று நான் ஊகித்துக் கொண்டேன்.

"என்னோட ஏற்பாடுதான். நீ நேர்ல அவகிட்ட பேசு. கல்யாணம் செய்துக்கறதுல விருப்பமில்லைன்னு சொல்லு. ஆனா அந்த பொண்ணு மேல உனக்கு எந்த வெறுப்புமில்லைனும் சொல்லிடு."

அவன் யோசனை எனக்குப் பிடித்து விட்டது. இதை முன்னமே செய்திருக்கலாம். ஏன் இவ்வளவு நாள் தோன்றாமல் போய்விட்டது.

ரகுவின் தங்கை அந்தப் பெண்ணை அழைத்துக் கொண்டு வந்தாள். ரகுவும் அவன் தங்கையும் மெள்ள அறையை விட்டு நழுவினர்.

எனக்குள் சின்னதாக ஒரு பரபரப்பு உண்டானது. நான் உட்காரச் சொல்லியும் அவள் உட்காராமல் நின்றாள். என்ன பேசுவது எப்படி ஆரம்பிப்பது என்று தடுமாறினேன்.

தலையைக் குனிந்து கொண்டு நின்றாள். குளித்து முடித்து தழைய பின்னியிருந்தாள். சந்தனக் கலரில் பாவாடையும் ப்ளவுசும் காப்பி கலரில் தாவணியும் அணிந்து பளிச்சென்று இருந்தாள்.

என்னைப் போலவே இவளும் ஒரு மௌனப் பிரகிருதி என்று தோன்றியது. இவளிடம் வேறு எதுவும் பேச முடியாது என்றும் நினைத்தேன். எனக்கும் இது திடீர் சந்திப்பு என்பதால் பதற்றத்தைக் குறைக்க முடியவில்லை. இரண்டு நிமிடங்கள் நாங்கள் எதுவும் பேசிக் கொள்ளவில்லை. ரகு உள்ளே நுழைந்ததும் அவள் வெளியேறினாள்.

"என்ன?" என்று ரகு புன்முறுவலித்தான்.

"ஒண்ணும் பேசலை ரகு. பேச முடியலை. ப்ளீஸ் நீயே அவகிட்ட சொல்லிடு."

"பொண்ணு எப்படியிருக்கா?"

"ஸ்மார்ட்டா இருக்கா. ரொம்ப சாஃப்ட் டைப் மாதிரி தெரியுது."

"இந்தப் பொண்ணு கல்யாணமே ஆகாம கிழவியானா நல்லாயிருக்குமா?"

"ரகு..."

"உங்கப்பா மேல உள்ள கோபத்தால கல்யாணத்தை வேண்டாம்னு சொல்லாதே. உன்னைக் கேக்காம அவங்க ஏற்பாடு பண்ணிட்டாங்கன்றதை உன்னால தாங்க முடியலை... ஜஸ்ட் ஈகோ. வேறே எதுவுமில்லை..."

அவன் சொன்னதில் இருந்த நியாயம் என்னை உலுக்கியது. பளிச்சென்ற அந்த பெண்ணின் முகம் மறுபடி மறுபடி நினைவில் வந்தது. அவளிடமிருந்த மௌனமும், பய்யமும் நினைத்துப் பார்க்கையில் ரம்மியமாய் இருந்தன. அந்த முகம் அப்படியே கிழத்தன்மை வாய்த்தால் எப்படியிருக்கும் என்ற கற்பனை சகித்துக் கொள்ள முடியாததாக இருந்தது.

சொல்லாமல் கொள்ளாமல் சென்னைக்குத் திரும்பிவிடும் ஐடியாவை மெல்ல மெல்ல நான் கைவிட்டுவிட்டேன்.

# .ச.ங்.கி.லி.

இக்ராமுல்லாஹ்



# பராமரிப்பின்றி வாடுகிற கூந்தலுக்கு அழகுண்டோ ?

உங்கள் கூந்தல் பராமரிப்பின்றி வாடுகிறதா என்பதைக் கண்டறிய இதோ ஒரு சுலபமான வழி. குளித்த பிறகு தலை வாரும்போது சிக்குகள் இருக்கிறதா என்று பாருங்கள். சிக்குகள் இருந்தால் கூந்தல் வலுவற்றும், பராமரிப்பின்றி வாடுவதாகவும் அர்த்தம்.

இந்நிலை கூந்தலை சோப்பாலும், சாதாரண ஷாம்பூக்களாலும், மற்ற சாதாரண பொருட்களாலும் கழுவுவதால் கூந்தலின் இயற்கை நலன்களும், ஈரப்பதமும் வற்றிப்போய் ஏற்படுகிறது. மேலும் கூந்தலை சாதாரண பொருட்களால் கழுவும்போது அழுத்தித் தேய்ப்பதால் அது சேதமடையவும் கூடும்.

எனவே சிக்குகளை சீப்பால் சீவி எடுக்க முயற்சிக்காதீர்கள். வலுவற்ற முடிகள் அதனால் உடைந்து போகக்கூடும். அதற்குப்பதில் கூந்தலுக்கு அளியுங்கள் :



ஜோலீன்
ஃபிலிம் ஹேர் ஸ்டைலிஸ்ட்

## புதிய ஸன்ஸில்க் ஆஃப்டர்வாஷ் கண்டிஷனர்
## கூந்தலுக்கு விசேஷ ஊட்டு

புதிய ஸன்ஸில்க் ஆஃப்டர் வாஷ் கண்டிஷனர், குளித்த பிறகு கூந்தலுக்கு பராமரிப்பு தேவைப் படும்போது செயல்புரியும். சிக்குகளை இதமாய் அகற்றி, கூந்தல் சேதமடையாமல் பாதுகாத்து மென்மையாகவும், அழகாகவும் ஆக்கும்.



குளித்த பிறகு கூந்தலிலுள்ள அதிகப்படி நீரை பிழியவும். தேவையான அளவு ஸன்ஸில்க் ஆஃப்டர்வாஷ் கண்டிஷனர் எடுத்து கூந்தல் முழுவதும் தடவவும் நுரைவராது



இரண்டு நிமிடம் நியூட்ராகேர் நலன்களை கூந்தல் எடுக்க விடுங்கள்.



பிறகு அலசுங்கள். நன்கு பராமரிப்பு பெற்ற கூந்தல் தொட்டால் வழுவழுப்பாக இருக்கும். டவலால் தலையை துவட்டி வேகமாக சீவவும். இப்போது முடி உடைந்துவிடும் என்கிற கவலை வேண்டாம். கூந்தல் சிக்குகளற்றும், வலுவாகவும், நல்ல பராமரிப்பு பெற்றும் இருக்கும்.



பிறகு வழக்கம்போல் கூந்தலை காய வைக்கவும். ஸன்ஸில்க் ஆஃப்டர்வாஷ் கண்டிஷனரின் நலன்கள் கழுவிய பின்னரும் நீண்ட நேரம் கூந்தலில் தங்கும். அதனால் கூந்தல் சிக்குகளற்றும், வலுவாகவும் இருக்கும்.

இதமாய் தழுவும் மென்மை, இதுவரைக் கண்டிராத அழகுடன் திகழும் கூந்தலைப் பெற நேரம் வந்து விட்டது.

ரூ. 2/- விலையுள்ள சிக்கனமான சாஷேயைப் பயன்படுத்திப் பாருங்கள்.







# ஸன்ஸில்க்

ஆஃப்டர் வாஷ்

**கண்டிஷனர்**

நியூட்ராகேர் உள்ளது.

**"இதமாய் தழுவும் மென்மை இதுவரைக் கண்டிராத அழகான கூந்தல்."**

இந்துஸ்தான் லீவர் லிமிடெட்டின் தரமான தயாரிப்பு.

தேர்ந்தெடுத்த நகரங்களில் மட்டும் கிடைக்கிறது

HTA.2963.95

# 3

# மாண்புமிகு கம்சன்

மறுநாள் காலை பிரபு ஆராய்ச்சிக் கூடத்துக்கு வந்தபோது அங்கு ஏற்கெனவே பாலுவும் சாலமனும் தங்கள் வேலைகளில் ஈடுபட்டிருந்தனர்.

தான் கவனிக்க வேண்டிய சில 'ஃபைல்'களைப் பார்த்துவிட்டு பிரபு மற்றவர்கள் இருந்த இடத்துக்கு வந்தார்.

அந்த இடம் நீண்ட ஓர் அறை. அறையின் இரண்டு பக்கத்திலும் சுவரையொட்டி பளபளக்கும் கருங்கல் மேசைகள்.

ஒரு பக்கம் சிறிய கூண்டுகள் வரிசையாக அடுக்கப்பட்டிருந்தன. கூண்டுகள் சிலவற்றில் எலிகள் அங்குமிங்கும் ஓடிக்கொண்டிருந்தன; எலிகளின் எடைக்கேற்ப கூண்டுகள் வகை வகையாய்ப் பிரிக்கப்பட்டிருந்தன. மற்ற கூண்டுகள் காலியாய் இருந்தன. மறுபக்கச் சுவரையொட்டி இருந்த மேசை மேல் நிறைய கண்ணாடிக் குடுவைகள் - பலவித அளவுகளில் இருந்தன. சிலவற்றில் அளவுக் குறிக்கேற்ப திரவங்கள்; மற்றும் சிலதில் திரவங்கள் கொஞ்சமே இருந்தன. எல்லாமே பார்ப்பதற்குத் தண்ணீர் போல இருந்தது. ஒவ்வொரு கண்ணாடிக் குடுவையின் மேலும் எண்களும் ஆங்கில எழுத்துக்களும் எழுதப்பட்டிருந்தன. எது எது என்னென்ன என்று பார்த்ததும் சுலபமாகத் தெரிந்து கொள்ள வேண்டி 'லேபிள்' ஒட்டப்பட்டிருந்தது.

பிரபு கூண்டுகளிலிருந்த எலிகளைப் போய்ப் பார்த்தார். அவற்றில் இரண்டு கூண்டுகள் அவருடைய கவனத்தை மிகவும் ஈர்த்தன. அவர் முகம் அளவில்லாத திருப்தியைக் காட்டியது. தம்முடைய நானூறு பக்க குறிப்புப் புத்தகத்தில் எலிகளின் உடலில் ஏற்பட்டிருக்கும் மாற்றங்களை ஒன்றுவிடாமல் குறித்துக் கொண்டார். விஞ்ஞான முன்னேற்றத்துக்கு முக்கிய காரணம் விஞ்ஞானியின் கூர்மையான கவனிக்கும் திறன் என்பதில் பிரபுவுக்கு என்றுமே சந்தேகமில்லை.

குறிப்புப் புத்தகத்தை மூடி பையில் வைத்துக் கொண்டு பாலு, சாலமன் இருக்குமிடம் சென்றார். வழியில் மற்றும் சில விஞ்ஞானிகளும், 'டெக்னிஷியன்'களும் பிரபுவுக்குப் பாராட்டுச் சொல்லி வாழ்த்தினார்கள்.

"குட்மார்னிங் டாக்டர் பாலு, டாக்டர் சாலமன்" பிரபு உற்சாகமாக அவர்களை அணுகினார்.

பதில் வந்தனம் செலுத்திவிட்டு, "இன்னும் ஆறு 'சொலூஷன்' செய்து விட்டால் இந்த வரிசை முடிந்துவிடும்" என்று சாலமன் கூறினான்.

"பரவாயில்லையே! அப்ப நான் இன்னைக்கிக் காலையிலேயே பரிசோதனையைத் தொடங்கிடலாம் போல இருக்கே" பிரபுவின் உற்சாகம் அருகிலிருப்போரையும் பற்றிக் கொள்ளும். இது பிரபுவுக்கே உரிய குணம். 'நீ இதைச் செய், நீ அதைச் சரியாகச் செய்' என்று உத்தரவுகள் போடாமல், தம் கூட வேலை செய்பவர்கள் கேட்கும்படி தம் விஞ்ஞான ஈடுபாட்டை ஆர்வத்தை அடிக்கடி வெளியிடுவார்.

"நேற்று பாராட்டு விழாவில் என்னையும் பாலுவையும் அறிமுகப்படுத்தி வைச்சீங்களே அதுக்கு நாங்க ரொம்ப நன்றி சொல்ல கடமைப்பட்டிருக்கோம்," சாலமன் குரலில் நெகிழ்ச்சி இருந்தது.

"இது என்ன பேச்சு? நீங்கள் நமது ஆராய்ச்சிகளுக்கு எவ்வளவு உதவி செய்கிறீர்கள்.... 'கோ-சயின்டிஸ்ட்' என்றால் சும்மாவா? உங்கள் இருவருக்கும் தனியாக ஒரு பாராட்டு விழாவை நானே ஏற்பாடு செய்யணும். இப்போது நாம் தொடங்கும் பரிசோதனைகளின் முடிவு தெரிந்ததுமே அந்த ஏற்பாட்டைச் செய்யலாம்னு இருக்கேன்."

"இப்போது எந்த மாதிரி பரிசோதனை ஆரம்பிக்கிறீங்க?"

"டாக்டர் பாலு, அதைப் பற்றி நான் இப்போது சொல்வது சரியில்லையே. நமக்குக் கிடைத்திருக்கும் மத்திய அரசின் பண உதவி பற்றி உங்களுக்குத் தெரியும். அந்த உதவி கிடைப்பதற்கு நாம் பட்டபாடும் தெரியும். அதில் ஒரு 'கண்டிஷன்' இந்த ஆராய்ச்சியின் தன்மை, முடிவு எல்லாம் கடைசி வரை - அதாவது ரிப்போர்ட் வெளியாகும் வரை - நாம் யாரிடமும் பகிர்ந்து கொள்ள முடியாதவை. எனக்கு மத்திய அரசிலிருந்து




நேரடியாகத் தகவல் இதுபற்றி வந்துள்ளதே. அதனால்தான் பார்க்கிறேன். ஆனால் உங்கள் இருவருக்கும் இதில் முக்கிய பங்கு உண்டு. இது நிச்சயம்" என்று பிரபு முறையாக விளக்கியதும் பாலு, சாலமன் மேலே ஒன்றும் பேச முடியவில்லை.

பிரபு மீண்டும் தன் குறிப்புப் புத்தகத்தை எடுத்து அதில் எழுத ஆரம்பித்தார். பாலு, சாலமன் இவர்கள் தயாரித்திருந்தவைகளைப் பற்றி எல்லாக் குறிப்புகளையும் அட்டவணையில் பதித்துக் கொண்டார். இருவருக்கும் நன்றி சொல்லிவிட்டு, அங்கிருந்த 'டெக்னிஷியன்' ஒருவனிடம் போய் தாம் ஆரம்பிக்கவிருந்த பரிசோதனைக்ககான இருபது எலிகளைக் கூண்டில் வைக்க ஏற்பாடு செய்தார். "பத்து ஆண் எலிகள்; பத்து பெண் எலிகள். இரண்டு கூண்டுகள் வேண்டும். ஒவ்வொன்றையும் இரண்டு பகுதியாகப் பிரிக்க நடுவில் தடுப்பு. பிரித்த கூண்டில் ஒரு பக்கம் ஐந்து ஆண் எலிகள்; மறுபக்கம் ஐந்து பெண் எலிகள். சரியா? மற்றபடி வழக்கமான தயாரிப்பு" பிரபு விவரித்துவிட்டு தம் அறைக்குத்

**வாசன்**

திரும்பினார்.

பிரபு பார்வையிலிருந்து மறைந்ததும், பாலுவும் சாலமனும் ஆராய்ச்சிக் கூடத்திலிருந்து வெளியே வந்தனர்.

சாலமன் ஒரு சிகரெட்டைப் பற்றவைத்தான்.

"ஏண்டா பாலு, ஆள் அசைய மாட்டான் போல இருக்கே?"

"எனக்கு ஒரே ஒரு வழிதான் தெரியுது."

"என்ன?"

"அவன் எல்லாத்தையும் குறிப்புப் புத்தகத்திலே எழுதி எழுதி வைக்கிறானே அந்தப் புத்தகத்தை ஒரு தரம் எடுத்துக்கிட்டு போய் 'ஜெராக்ஸ்' செய்துகிட்டா நமக்கு எல்லா விவரமும் தெரிஞ்சிடும்."

"ஐடியா நல்லா இருக்கு... ஆனா அவன் அதை எப்பவும் தன் கைப்பையிலேயே வைச்சிக்கிறானே?"

"பார்ப்போம்... நமக்குன்னு ஒரு நல்ல சந்தர்ப்பம் வராமலா போயிடும்" பாலுவின் நம்பிக்கை சாலமனுக்குத் தெம்பூட்டியது.

> **சிந்திப்பதானால் நிதானமாகச் சிந்தியுங்கள். செயல்படுவதானால் உறுதியோடு செயல்படுங்கள்; விட்டுக்கொடுப்பதானால் மனநிறைவோடு விட்டுக் கொடுங்கள்; எதிர்ப்பதானால் யோசித்து திடமாக எதிர்த்திடுங்கள்.**
> **- கோல்டன்**
> **தகவல் : டி.எம். முருகானந்தம்**

"இப்ப நாம தயார் செய்துகிட்டு இருக்கோமே அந்த கெமிக்கல் என்ன தெரியுமில்லே?" சாலமன் நிறுத்தினான்.

"ஏன் தெரியாது? அதான் 'மேலதயான்' போல வாடை அடிக்குதே..."

"கரெக்டா சொல்லிட்டியே பாலு. அது 'மேலதயான்' என்பதில் சந்தேகமேயில்லை. 'அமெரிக்கன் சயனமிட்' கம்பெனிதான் அமெரிக்காவுலே இதைத் தயாரிக்குது. இதை வைச்சு நிறைய ஆராய்ச்சி செய்திருக்காங்கன்னு நான் படிச்சிருக்கேன்" - சாலமன் தொடர்ந்தான்.

"அப்படின்னா 'மேலதயான்' எப்படிப்பட்ட பூச்சிக்கொல்லின்னு ஏற்கெனவே தெரிஞ்சதுதானே. இதை ஏன் பிரபு ஆராய்ச்சிக்கு எடுத்துக்கணும்?" பாலுவுக்குப் புரியவில்லை.

பிரபுவின் ஆபீஸ் பெரிய அறையாக இருந்தது. அறைவாசலை அவர் பார்க்கும்படியாக அவருடைய மேசை, வசதியான 'குஷன் சேர்' என்று களையுடன் இருந்தது. சுவரில் பிரபுவின் பட்டப் பத்திரங்கள் அழகாக மாட்டப்பட்டிருந்தன. அவர் சில பிரமுகர்களுடன் எடுத்துக் கொண்ட படங்கள் இருந்தன. ஒரு பெரிய 'கோத்ரெஜ்' ஃபைல் கேபினட் முக்கிய விவரங்களைப் பாதுகாக்க வைக்கப்பட்டிருந்தது. இடது பக்கத்தில் ஒரு கம்ப்யூட்டர், பிரிண்டர் என இத்யாதி ஆபீஸ் விவரங்கள்.

அறைக்குத் திரும்பியதும் காப்பிக்குச் சொல்லிவிட்டு, கம்ப்யூட்டரைத் துவக்கினார். கேபினட்டில் பூட்டி வைக்கப்பட்டிருந்த ஒரு 'டிஸ்'கை எடுத்து அதில் அன்றைய விவரங்களைப் பதிவு செய்ய ஆரம்பித்தார்.

ஆராய்ச்சியை எப்படிச் செய்ய வேண்டும், எந்தக் கட்டத்தில் எந்தப் பரிசோதனைகள் செய்தால் என்னென்ன முடிவுகளை எதிர்பார்க்கலாம் என்பதை விவரமாக ஏற்கெனவே குறிப்பிட்டு இருந்தார். 'டிஸ்க்'கின் முதல் பாகத்தில் அது இருந்தது. அதை ஒரு 'காபி' பிரிண்டில் எடுத்துக் கொண்டார். ஆராய்ச்சி அறையில் மும்முரமாக வேலை செய்யும் போது அடிக்கடி ஓடி வந்து கம்ப்யூட்டரில் பார்ப்பது சாத்தியமில்லை. பிரிண்டான தாள்களைக் குறிப்புப் புத்தகத்தில் வைத்து, அதைக் கைப்பையில் வைத்துக் கொண்டார். கம்ப்யூட்டர் டிஸ்கை வெளியே எடுத்துவிட்டு, கம்ப்யூட்டரை நிறுத்தினார். அப்போது அவருடைய காரியதரிசி பானு உள்ளே நுழைந்தாள்.

"சார்... ரிப்போர்டர் நீலான்னு ஒரு பெண் போனில் இருக்காங்க. உங்களைப் பார்த்துப் பேசணுமாம்... எப்ப வரச் சொல்லலாம்?"

தன்னுடைய காலண்டரைப் பார்த்தார். அந்த வாரம் அதிக நேரமிருப்பதாய்த் தெரியவில்லை. தள்ளிப் போடுவதை விட அன்றே முடித்துவிடலாம் என்ற தீர்மானத்துடன், "நீலாவை இன்னைக்கி நாலு மணிக்கு வரச் சொல்லிடு... இன்னைக்கித் தவறினால் அடுத்த வாரம்தான். சரியா?" பானு வெளியேறினாள்.

காலண்டரில் பகல் 4:00 மணிக்கு எதிரே 'நீலா' என்று குறித்துக் கொண்டார்.

பிரபு மீண்டும் ஆராய்ச்சி அறைக்குப் போன போது பாலு, சாலமன் வேலைகளைச் சீராக முடித்திருந்தார்கள். பிரபுவுக்குத் தேவையான எல்லாம் வழக்கமான மேசையில் வைக்கப்பட்டிருந்தன. பாலுவுக்கு வேறொரு வேலை கொடுத்துவிட்டு, சாலமனைத் தம்முடன் அழைத்துச் சென்றார் பிரபு.

"சாலமன், அந்த 'பிரபரேஷனை' எடுத்து அதிலிருந்து இரண்டு மில்லி லிட்டர் இதிலே போடுங்க. நல்லா கலந்துட்டு, நூறு மைக்ரோ லிட்டர் 'சிறிஞ்'களில் ஐந்து தயார்




# டெபாசிட் திட்டங்கள்

## ஃபிக்சட் டெபாசிட்

| காலம் | வட்டி விகிதம் (ஆண்டிற்கு) | குறைந்த பட்ச டெபாசிட் தொகை |
|---|---|---|
| ஓர் ஆண்டு | **24%** | ரூ.10,000/- |

ஊக்கத் தொகை *1%*

## க்யூமுலேடிவ் டெபாசிட்

| காலம் | டெபாசிட் தொகை | முதிர்வுத் தொகை | வருடாந்தர வட்டி | ஊக்கத் தொகை |
|---|---|---|---|---|
| 13 மாதம் | ரூ.10,000/- | ரூ.13,000/- | 27.70% | 1.5% |
| 25 மாதம் | ரூ.10,000/- | ரூ.16,000/- | 28.80% | 3.0% |
| 37 மாதம் | ரூ.15,000/- | ரூ.30,000/- | 32.4% | 4.5% |

### ஈஸ்வரி பாண்ட்

குறைந்த பட்சத்தொகை
ரூ.**25,000**
இரு மடங்காகிறது
**37** மாதங்களில்
ரூ.**50,000/-**
ஊக்கப்பரிசு
**4** கிராம் தங்கக்காசு

### திருமலா பாண்ட்

குறைந்த பட்சத்தொகை
ரூ.**50,000**
மும் மடங்காகிறது
**60** மாதங்களில்
ரூ.**1,50,000/-**
ஊக்கப்பரிசு
**8** கிராம் தங்கக்காசு

ESWARI
**ஈஸ்வரி பைனான்ஸ் & இன்வெஸ்ட்மெண்ட்ஸ்**
(ஈஸ்வரி குரூப் நிறுவனங்கள்)

தலைமை & நிர்வாக அலுவலகம்: 4, எல்டாம்ஸ் ரோடு, முதல் மாடி, ஆழ்வார்பேட்டை, சென்னை - 600 018.
தொலைபேசி: 455349, 459557, 457583.

கிளைகள் : நெ. 13, ரட்டன் பஜார், பாரிமுனை, சென்னை-3. போன்: 560767,
49, வடக்கு உஸ்மான் ரோடு, தி.நகர், சென்னை-17. போன்: 8259661,69, முதல் மாடி,
புரசைவாக்கம் நெடுஞ்சாலை, புரசைவாக்கம், சென்னை-7. போன்: 5324937, 5324940,
நெ. 72, ஜி.எஸ்.டி. ரோடு, குரோம்பேட்டை, சென்னை-44. 0போன்: 405845, நெ. 11, பாரதி சாலை,
திருவல்லிக்கேணி, சென்னை-5. போன்: 841187, நெ. 19/6, 4வது மெயின் ரோடு, முதல் மாடி,
நங்கநல்லூர், சென்னை-61. போன்: 2345891, நெ. 13, ஆற்காடு சாலை, சாலிக்கிராமம்,
சென்னை-93. போன்: 428650, நெ. 25, முதல் மாடி, ஜவஹர்லால் நேரு தெரு, பாண்டிச்சேரி-1. போன்: 31830.

எல்லா ஞாயிறு அன்றும் அலுவலகம் இயங்கும்

**உங்கள் வளர்ச்சி ஈஸ்வரியுடன் வளரட்டும்!**

LOTUS/95

செய்யுங்க" என்று கடகடவென்று சொன்னார்.

அடுத்த இருபது நிமிடங்களில் பிரபு கேட்ட நூறு மைக்ரோலிட்டர் அளவுகளைத் தயார் செய்து அவரிடம் தந்தான் சாலமன்.

ஒரு கூண்டிலிருந்த ஐந்து ஆண் எலிகள் ஒவ்வொன்றிற்கும் நூறு மைக்ரோலிட்டர் அளவான திரவத்தைச் செலுத்தினார் டாக்டர் பிரபு. தன் குறிப்புப் புத்தகத்தில் எழுதிக் கொண்டார். சாலமன் அந்தக் குறிப்புப் புத்தகத்தைக் கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தான்.

பிரபு அங்கிருந்து வேறொரு எலிக் கூண்டுக்குப் போய்ச் சில விவரங்களை எழுதிக் கொண்டார். ஒரு டெக்னிஷியனிடம் ஏதோ கேட்டார். பிறகு பாலு காரியமாக இருந்த பக்கம் வந்தார். அவரைப் பார்த்ததுமே, பாலு, "யாரோ மாலதின்னு ஒரு பெண் உங்களைப் பார்க்கணும்னு உங்க ஆபீஸ்லே காத்துக்கிட்டு இருக்காங்களாம். பானு வந்து சொல்லிட்டுப் போனாங்க. உங்க ஆராய்ச்சி இடையே குறுக்கிட விரும்பாம இப்ப சொல்றேன்" என்றான்.

பிரபு பதில் சொல்லவில்லை. பேசும் நிலையில் அவர் இல்லை. மாலதி இத்தனை உறுதியுடன் தன்னைப் பார்க்க வர வேண்டிய காரணம் என்ன என்பதை அவர் புரிந்து கொள்ளவே முடியவில்லை. அவர் முகத்தில் வியர்வைத் துளிகள் பளபளத்தன. அறைக்கு விரைந்தார்.

**பா**லுவுக்கு அந்தக் காட்சி ஒருவித திருப்தியைத் தந்தது. பிரபு ஏதோ விஷயத்தில் சிக்கிக் கொண்டிருப்பதாக ஊகித்தான். உடனே சாலமன் வேலை செய்து கொண்டிருந்த இடத்துக்குப் போனான்.

"சாலமன், பிரபு விஷயம் தெரியுமா?"

"என்னடா பாலு அதுக்குள்ளயா? 'மேலதயான்' ஆராய்ச்சியைப் பத்தி கண்டுபிடிச்சுட்டியா?"

"அதைவிட சுவாரசியமான விவரம் ஒண்ணைக் கண்டுக்கிட்டேன்."

"அப்படியா... எனக்குச் சொல்ல நாள் பாத்துகிட்டு இருக்கியா?"

"பிரபுவைத் தேடி மாலதின்னு ஒரு பெண் வந்திருக்கா. பிரபுவிடம் சொன்னதும் ஆள் வியர்த்துக் கொட்ட ஓட ஆரம்பிச்சான் தெரியுமா?"

"தெரிஞ்சுக்கிட்டேன்" சாலமன் கிண்டலாகக் கண்ணடித்துச் சிரித்தான். "அப்ப நாம பிரபு அறைப்பக்கம் போய் வரலாமா?" என்றான்.

**பி**ரபு தம் அறைக்குள் நுழைந்ததும் அங்கு உட்கார்ந்திருந்த மாலதி சட்டென்று எழுந்து நின்றாள்.

பிரபுவும் மாலதியும் ஒருவரையொருவர் கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டனர். அப்போது அங்கு வந்த பானுவின் குரல்தான் அவர்களை இந்த உலகத்துக்கு அழைத்தது.

"நான் என்ன சொல்லியும் இவங்க கேக்காம தீர்மானமாய் இங்கேயே உக்காந்திட்டாங்க, சார்" பானு அழாத குறைதான்.

"பரவாயில்லை பானு... நீ எதுவும் செய்திருக்க முடியாது" என்று பிரபு சொன்னதும் - பானு தன்னிடத்துக்குத் திரும்பினாள்.

"ஹலோ, மாலதி" என்றார் பிரபு சுருக்கமாக.

"ஹலோ, பிரபு" மாலதியும் அதே பாதையில் தொடர்ந்தாள்.

"இத்தனை வருஷத்துக்கப்புறம் என்ன இப்படி?"

"காரணத்தோடதானே வந்திருக்கேன், பிரபு."

"அப்படியென்ன காரணம் மாலதி?"

"காரணத்துக்குப் பெயர் கோபு... வயசு ஒன்பது... உங்கள் பையன்."

மாலதியின் சொல் ஒவ்வொன்றும் பிரபுவைத் துளைத்தது. அவர் கையிலிருந்த குறிப்புப் புத்தகத்தை மேசை மேல் போட்டார். தடுமாறி ஒரு நாற்காலியில் உட்கார்ந்தார். அவருக்குத் தலைசுற்றியது. காட்சிகள் வேகமாகச் சுழன்றன. சாந்தி... பையன், பெண்... மாலதி... மாலதியின் பையன் கோபு... இல்லை பிரபுவின் பையன் கோபு... பிரபுவின் இன்னொரு பையன் கோபு... பிரபு கைகளால் தன் தலையைப் பிடித்துக் கொண்டார்.

(தொடரும்)

---



"செல்லம்மாங்கிற உன் பெயரை ஏன் சிக்மானு மாத்திக்கிட்டே?"

"அப்பத்தான் இந்திக்காரப் பெண்ணுனு நினைச்சுக்கிட்டு தமிழ் சினிமாவில் கதாநாயகியா நடிக்க சான்ஸ் தருவாங்க!"

- உ. ராஜாஜி

**"ஏய்யா, '302', சாராயம் வடிக்கிற ஆசாமி கிட்ட எவ்வளவு மாமூல் வாங்கினே?"**

**"நீங்க வாங்கினதுல பாதிதான் கொடுத்தான் சார்!"**

**- டி. வெங்கடாசலம்**



# ஃபுட் போர்டு கிழவி!

**திருவாரூர் பாபு**



கிழவியின் காதில் தொங்கிக் கொண்டிருந்த பாம்படம் ஆடியது. கிட்டத்தட்ட தோளைத் தொட்டுக் கொண்டிருந்த பாம்படம்! காதை அறுத்துக் கொண்டு கீழே விழுந்து விடுமோ என்று எனக்குப் பயமாக இருந்தது.

"ஐயோ.... ஒரே ஒரு நிமிஷம் விழுதியூர்ல நிப்பாட்டு. டப்புன்னு எறங்கிர்றேன்..''

கிழவி கெஞ்சலாய்க் கேட்டாள்.

கண்டக்டர் டிக்கெட் புத்தகத்தால் தலையில் அடித்துக் கொண்டார்.

"சொன்னா கேட்க மாட்டியா...? ஒன்ன யாரு இந்த பஸ்ஸுல ஏறச் சொன்னா... இந்த பஸ்ஸு விழுதியூர்லயெல்லாம் நிக்காது கிழவி... கீழ எறங்கு...''

அடித் தொண்டையில் கத்தினார்.

இன்றைக்குக் கண்டக்டருக்கு நேரம் சரியில்லை என்றே எனக்குத் தோன்றியது. திருவாரூரில் பேருந்து புறப்பட்டதிலிருந்து யாராவது ஒருவர் இம்சை கொடுத்துக் கொண்டே இருந்தார்கள். கத்தி கத்தி கண்டக்டரின் தொண்டை கட்டிக் கொண்டது போல் தெரிந்தது.

"எல்.எஸ்.எஸ்.ன்னு தெளிவா போட்டிருக்கு... ஒரு வருஷமா வண்டி ஓடிக்கிட்டு இருக்கு... பார்க்காம கேட்காம ஏறி ஏன் ஸார் உசிர வாங்கறீங்க...!''

கண்டக்டர் எரிச்சலாய் விசில் அடித்து ஏற்கெனவே இரண்டு இடங்களில் பேருந்தை நிறுத்தும்படியாகியிருந்தது. இப்போது இந்தக் கிழவி!

கொரடாச்சேரி பஸ் ஸ்டாண்டில் கிழவி கையில் ஒரு கூடையுடன் முன் பக்கமாய் ஏறி விட்டது.

"எங்கம்மா போற...?''

டிரைவர் கேட்டதற்கு பதில் ஒன்றும் சொல்லாமல் ஓரமாய் உட்கார்ந்து கொண்டது.

"எங்க போற...?'' கண்டக்டர் அதட்டலாய்க் கேட்ட போது, "விழுதியூர் ஒண்ணு கொடு...'' அலட்சியமாய் பதில் வந்தது.

கண்டக்டர் விரக்தியின் விளிம்புக்குச் சென்றார்.

"எறங்கு கிழ... அங்கெல்லாம் இந்த பஸ்ஸு நிக்காது... பின்னால எட்டு வருது... அதுல போ...''

"ஐயைய்யோ.... அது ஒன்பது மணிக்குப்பா... நான் வெரசா போகணும். பேத்திக்குப் பிரசவ வலி எடுத்திடுச்சாம். சேதி வந்துச்சி... கொஞ்சம் விழுதியூர்ல எறக்கி விடுப்பா...'' கெஞ்சியது.





## வண்ணம் மாறிய வாழை

இது என்ன பூ? சிவப்பும் மஞ்சளுமாக வாழைப்பூ தோற்றத்தில்?

வாழைப்பூவேதான் என்றால் நம்புங்கள். இந்த அதிசய வாழைப்பூ விளைந்திருப்பது கன்னியாகுமரி மாவட்டத்திலுள்ள பத்மநாபா அரண்மனையில்!

படம், தகவல் : எஸ். ஜெயச்சந்திரன்

கொரடாச்சேரி பஸ் ஸ்டாண்டை ஒட்டி ரயில்வே ஸ்டேஷன். திருவாரூரிலிருந்து புறப்படும் ரயில் கிராஸ் செய்யும். இன்று ரயில் தாமதம். இப்போதுதான் கொரடாச்சேரி வந்திருக்கிறது. ஆனால் பேருந்து போகின்ற போக்கைப் பார்த்தால் ரயில் முன்னரே தஞ்சாவூர் போய்விடும் போல் இருந்தது.

"கிழவி... இப்ப நீ எறங்கல... தூக்கி கீழ போட்டுடுவேன்..." கண்டக்டர் மிரட்டினார்.

"எங்க, போடு பார்ப்போம்... ரொம்பத்தான் துள்ளாத! அட பாக்க எம் பேரப்புள்ள மாதிரியே இருக்க... கொஞ்சம் தயவு பண்ணுப்பா... கேட்டு கிட்ட கொஞ்சம் நிறுத்து இறங்கிர்றேன்..."

குரலில் கருதி இறக்கி, குழைவாய்ப் பேசியது.

"ஒன் இஷ்டத்துக்கு நிறுத்த முடியாது... அங்கெல்லாம் நிறுத்தினா என் வேலை போயிடும்..." கண்டக்டர் எரிச்சலாய்க் கத்தினார்.

"என்னவோ போப்பா... மக்களுக்குப் பிரயோஜனப்படத்தான் பஸ்ஸு. நீ என்னான்னா போற வழியில இறக்கி விட மாட்டேங்கிற... சரி அப்ப எங்கதான் பஸ் நிக்கும்...?" கிழவி நீட்டி முழக்கியபடி பேருந்திலிருந்து இறங்குவதற்கு எவ்வித பிரயத்தனமும் செய்யாமல் அமர்ந்திருந்தது.

எனக்கென்னவோ கிழவி வேண்டுமென்றே செய்கிறாற்போல் பட்டது. வில்லங்கம் செய்வதற்கென்று பஸ்ஸுக்குள் ஏறியிருக்கிறாளோ என்று கூட தோன்றியது. நேரம் வேறு நகர்ந்து கொண்டிருக்க... பேசாமல் கண்டக்டர் அவளுக்கு டிக்கெட் கொடுத்து விழுதியூரில் இறக்கி விடலாமே என்று கூட தோன்றியது.

ஐந்து கிலோ மீட்டர் தூரத்தில் விழுதியூர். ரயில் கேட்டுக்குப் பக்கத்தில் சாலையோரமாகச் செல்லும் செம்மண் பாதையில் இரண்டு கிலோ மீட்டர் நடக்க வேண்டும். கொரடாச்சேரியிலிருந்து நகரப் பேருந்து செல்கிறது என்றாலும் எப்போதாவதுதான் செல்லும். அதனால்தான் கிழவி எல்.எஸ்.எஸ். பேருந்தில் ஏறிக் கொண்டு பிரச்னை செய்கிறது.

"சரி... அடுத்தது எங்கதான் நிறுத்துவ...?"

"நீடாமங்கலம்தான்..."

"சரி... ஒரு நீடாமங்கலம் கொடு..."

கண்டக்டர் கிழவியை ஆச்சரியமாகப் பார்த்தார். "ஏய்... கிழவி! பஸ் போய்க்கிட்டு இருக்கிறப்ப வம்பு பண்ணக் கூடாது. நிச்சயமா நிறுத்த மாட்டேன். சொல்லிட்டேன்..." என்றபடியே டிக்கெட் கிழித்துக் கொடுத்தார்.

ரயில் பெரும் சப்தத்துடன் புறப்பட்டுச் செல்ல... கண்டக்டர் முணுமுணுத்தார். "இங்கேயே பத்து நிமிஷம் போயிட்டு.. வந்து சேருது பாரு எனக்குன்னு!"

கிழவியின் போக்கு எனக்கு ஆச்சரியமாக இருந்தது. நீடாமங்கலத்திற்கு டிக்கெட் எடுத்திருக்கிறதே... ஏன்... நீடாமங்கலத்தில் இறங்கி திரும்ப பேருந்தில் ஏறி வருமா...?

இல்லை... நீடாமங்கலத்தில் இருந்து குறுக்கு வழி ஏதாவது இருக்கிறதா...?

கிழவி அலட்சியமாகக் கால்களை விரித்துப் போட்டுக் கொண்டு உட்கார்ந்திருந்தது. சுருக்குப் பையில் இருந்து வெற்றிலை எடுத்து மடக்கி வாயில் திணித்துக் கொண்டது.

"ஐயனாரேன்னு புள்ள பொறக்காம இருக்கணும். விவரம் தெரியாதவ ளுவோ... ஒண்ணுகிடக்க ஒண்ணு பண்ணிடுவாளுவோ... நான் போய்த் தான் சரியா வரும்..."

தனக்குத் தானே முணகிக் கொண்டது.

இழந்து விட்ட வேகத்தைப் பேருந்து ஈடுசெய்யும் நோக்குடன் பறந்தது.

கிழவி கையைக் கீழே ஊன்றிக் கொண்டு எழுந்தது. ஜன்னல் வழியே பார்த்தது.

மாராப்பைச் சரிசெய்து கொண்டு, வைத்திருந்த கூடையை எடுத்துக் கொண்டது. எனக்குப் புரிந்தது. பேருந்தை நிறுத்தச் சொல்லி வம்பு வளர்க்கப் போகிறது.

கண்டக்டரும், பேருந்துக்குள் இருந்த அனைவரும் கிழவியைப் பார்க்க... கிழவி கண்டக்டரைப் பார்த்துச் சிரித்தபடி வாசல் படியை நெருங்கியது.

"ஏய்... கிழவி... எங்க போற... பேசாம உட்காரு. கீழே விழுந்து வைக்கப் போற..."

கண்டக்டரின் கத்தலைப் பொருட்படுத்தாமல் கிழவி படி அருகே சென்று கம்பியைப் பிடித்துக் கொண்டு நின்றது. திரும்ப கண்டக்டரைப் பார்த்துச் சிரித்தது.

கண்டக்டர் முகத்தில் ஆத்திரம் ஏறியது.

"தெரியும். இதுமாதிரி பண்ணுவேன்னு தெரியும். பார்த்துடுவம் வா. நிறுத்த மாட்டேனே.. சத்தியமா நிறுத்த மாட்டேன். இந்த வயசுல உனக்கு இவ்வளவு கொழுப்புன்னா... எனக்கு எவ்வளவு இருக்கும் பார்த்துடுவம்...?" என்றவர் பேருந்து வேகம் குறைவதை கவனித்து, "நிறுத்தாதண்ணே... போயிகிட்டே இரு..." என்று டபுள் விசில் கொடுத்ததும், பேருந்து வேகம் குறைந்தது.

பேருந்து வேகம் குறைந்ததற்குக் காரணம்... எதிரே கேட் சாத்தப்பட்டிருந்ததுதான்!

பேருந்து ரயில்வே கேட் அருகே நிற்க...

கிழவி... பொறுமையாய்... மிகப் பொறுமையாய்ப் பேருந்திலிருந்து கீழே இறங்கியது.

பின்னால் நின்றிருந்த கண்டக்டரைப் பார்த்து நக்கலாய்ச் சிரித்து விட்டு, விழுதியூர் 2 கி.மீ. என்று வைக்கப்பட்டிருந்த போர்டுக்கு அருகே பிரிந்து சென்ற செம்மண் பாதையில், காதில் தொங்கிய பாம்படம் அசைய... அசைய நிதானமாய் நடக்கத் தொடங்கியது.

வேண்டுமென்றே கொரடாச்சேரி பேருந்து நிலையத்தில் தாமதமாக்கி... டிரெயின் கிராஸ் செய்யும் நேரத்தைக் கணக்கு பண்ணி... நீடாமங்கலத்துக்கு டிக்கெட் எடுத்துக் கொண்டு... சாத்தப்பட்டிருந்த கேட்டுக்காகப் பேருந்து நிற்கையில்....

கிழவி!



"உனக்கு என்ன வரம் வேணும்னு கேட்டால், நினைச்சப்போ எல்லாம் கரப்பான்பூச்சியா மாறணும்னு வரம் கேட்கிறாயே... ஏன்?"

"என் மனைவி அதுக்கு மட்டும்தானே பயப்படுறா...!"

- எம். அசோக்ராஜா



"என் உடம்பு ரொம்ப பலவீனமா இருக்குன்னு ஒரு சர்டிபிகேட் தாங்க டாக்டர்!"

"என்ன விஷயம்?"

"அடிக்கடி கட்சில ரத்தக் கையெழுத்துப் போராட்டம் துவங்கி இம்சை பண்றாங்க!"

- அம்பை தேவா

"என்னங்க இது, கீர்த்தனையைப் பல்லவியோட நிறுத்திட்டாங்க, டீ.வி.ல?"

"நல்லா கவனி, அனுபல்லவியை வேற ஒரு கம்பெனி ஸ்பான்சர் பண்ணியிருக்கு. விளம்பரம் முடிஞ்சதும் அனு பல்லவி வரும்!"

- குரோம்பேட்டை மாலி



### ஏன் அடிச்சாங்க?

**"என்னங்க! அந்த சைக்கிள் கடைக்காரரைப் போட்டு கட்சிக்காரங்க அடிக்கிறாங்க...?"**

**"அதுவா... நம்ம தொகுதி எம்.எல்.ஏ. போயி வாடகை சைக்கிள் கேட்டதுக்கு 'ஆளைத் தெரியலை'ன்னு சொல்லிப்புட்டாராம்!"**

**- பட்டுக்கோட்டை, இ. ராதாகிருஷ்ணன்.**

### நம்பர் 'ஒன்'னை மறந்ததேன்?

தஞ்சை கரந்தை பகுதியில் உள்ள ஒரு குளிர்பானக் கடையிலுள்ள அறிவிப்பு!

''இங்கு 'குஷ்பு மோர்' கிடைக்கும்.''

(அது சரி, இப்போது நக்மாதானே நம்பர் ஒன்!)

- தஞ்சை - 1, டீ.வி. சோமசுந்தரம்.

### மரியாதை இவ்வளவுதான்!

*குடந்தைக்கு அருகில் உள்ள வலங்கைமானில்தான் ரைட் ஆனரபிள் சீனிவாச சாஸ்திரி அவர்கள் பிறந்தார். ஆங்கிலேயர்களே வியந்த இந்த ஆங்கில மொழி மேதைக்கு இங்கே ஒரு சிலை கிடையாது. அவர் வாழ்ந்த இடமும் இப்பொழுது ப்ளாட் ஆகிவிட்டது!*

*- வலங்கைமான், வெங்கட்.*

### கொஞ்சம் கவனியுங்க!

தஞ்சை தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் சித்த மருத்துவப் பிரிவு, அரண்மனை வளாகத்தில் செயல்பட்டு வருகிறது. ஆரம்பத்தில் இங்கு வந்தவர்கள் மிகவும் குறைவு. கடந்த பத்தாண்டுகளில் நிலைமை முற்றிலும் மாறிவிட்டது. இப்போது சராசரியாக ஒரு நாளில் நூறு முதல் நூற்றைம்பது பேர் சிகிச்சைக்கும் ஆலோசனைக்கும் வருகின்றனர். போதிய நிதிவசதி இன்மையால் இந்தச் சித்த மருத்துவப் பிரிவு குறிப்பிடத் தகுந்த அளவு விஸ்தரிக்கப்பட முடியாமல் உள்ளது.

- சாயிதோப்பு, சுப. வே. தமிழ்மணி.

### கதை சொல்லிகள்

தஞ்சாவூர் பெரிய கோயிலின் உள்ளே பிரதி வாரம் செவ்வாய் இரவு ஏழு மணிக்கு 'கதை சொல்லிகள்' என்கிற அமைப்பு கூடுகிறது. கிட்டத்தட்ட இருநூற்றைம்பது கூட்டங்களுக்கு மேல் நடந்து விட்டன. இந்த அமைப்பிற்குத் தலைவரோ, மற்ற பொறுப்புடையவர்களோ இல்லை. நிறுவி நடத்தி வருபவர் தஞ்சை ப்ரகாஷ் என்கிற பழுத்த இலக்கியவாதியாவார். கோயிலுக்கு வருவோரும் போவோரும் கதை சொல்லு தலை ஆவலோடு நின்று கேட்டுச் சென்றதுண்டு. லண்டனிலிருக்கும் 'story telling' அமைப்பைச் சேர்ந்த 'ஜேஸ்மின் அருமைநாயகம்' என்கிற பெண்ணும் இதில் கலந்து கொண்டு கதை சொல்லியிருக்கிறார்.

- தஞ்சாவூர்-8, புத்தகன்.

### யானையின் நினைவாற்றல்!

திருப்பனந்தாள் ஸ்ரீ செஞ்சடையப்பர் ஆலயத்தில் உள்ள யானை, ஏறத்தாழ பதினைந்து ஆண்டுகளுக்கு முன்னால், கோவில் வெளிப்பிரகாரத்தில், சுவாமி புறப்பாடு சுற்றி வரும் பொழுது, கழிவுநீர் சாக்கடையில் காலை விட்டு மாட்டிக் கொண்டது. அதனால் அந்த யானை இன்று வரை சுவாமி புறப்பாடு வெளிப்பிரகாரம் சுற்றி வரும் பொழுது, பாதிப் பிரகாரம் மட்டுமே வரும். வந்து மீண்டும் திரும்பி... பிரகாரத்தின் மறுமுனைக்கு வந்து சுவாமி புறப்பாடில் கலந்து கொள்ளும். பழைய நினைவை அதனால் மறக்க முடியவில்லை, பாவம்!

- திருப்பனந்தாள், கி. சங்கர்.

### விருது பெற்ற திருபுவனம்

**ஐந்தரி பட்டுச் சேலைகளின் தரத்திற்காக, திருபுவனம் பட்டு கூட்டுறவு சங்கமும், திருபுவனம் சோழன் பட்டு கூட்டுறவு சங்கமும் கடந்த இரு ஆண்டுகளாக முறையே தேசிய விருதுகளைப் பெற்றுள்ளன.**

**- திருபுவனம், ஜே. பாஸ்கர்.**

### டேய்! நானா ரௌடி?

தஞ்சாவூர் தாத்தாக்கள் பலருக்கு நான் கூறும் சம்பவம் நினைவிருக்கும். அந்தக் கால சினிமாக் கொட்டகை ஒன்றில் புதுப் படம் வந்தது. பெயர் "தஞ்சாவூர் ரௌடி!" முதல் காட்சியில், டைட்டில் திரையில் தோன்றிய மறுநிமிடம் அரங்கமே



வெகுண்டெழுந்தது. மலைப் பிஞ்சுகளும், சோடா பாட்டில்களும் பறந்தன. ரகளையின் உச்சகட்டமாக வெள்ளித்திரை நீக்கிரையாகியது!

மறுநாள் அதே படத்தை ரசிகர்கள் அமைதியாய்க் கண்டுகளித்தனர். அது எப்படி? படத்தின் டைட்டில் 'ரங்கூன் ரௌடி' என்று மாற்றப்பட்டிருந்தது!

- தஞ்சை - 7, ஜி. ராமமூர்த்தி.

### தியாகப்பிரும்மம் வழிபட்ட ராமர் விக்கிரகம்

திருவையாறு தியாகப்பிரும்மத்திற்கு ஒரே புதல்விதான்- சீதாலட்சுமி என்று பெயர். அவரை அகிலாண்டபுரம் குப்புசாமி ஐயர் என்பவர் மணந்து கொண்டார். அவர்களுக்குப் பிறந்த பஞ்சாபகேசய்யா என்னும் மகன் பிற்காலத்தில் பெரிய பாடகராக விளங்கினார். அவர் மனைவி குருவம்மா. பஞ்சாபகேசய்யா இளம் வயதிலேயே இறந்து விட்டார். அவர்களுக்குச் சந்ததி இல்லை. விதவையான குருவம்மா தஞ்சாவூரில் வரகப்பய்யர் சந்தில் இருந்த தன் பிறந்த வீட்டுக்குச் சென்று விட்டார். பிறகு அவரும் காலமானார். இந்த வீட்டில்தான் தியாகராஜர் வழிபட்ட ராம விக்கிரகம்



இன்றும் இருக்கிறது. இசைக் கலைஞர்கள் திருவையாறு சமாதிக்குச் சென்று பாடிவிட்டு நேரே இங்கு வந்து சிறிது நேரம் பாடிவிட்டுச் செல்கிறார்கள்.

- தஞ்சாவூர், வை. வீரசேனன்.

### நிஜ கிராமங்கள்

பாரதிராஜாவின் படங்களில் வரும் கிராமங்கள் எல்லாம் பாலீஷ் செய்யப்பட்ட கிராமங்கள். உண்மையான கிராமங்கள் தஞ்சை மாவட்டத்தில்தான் அதிகம் உள்ளன. குறிப்பாக தஞ்சைக்கு 12 கி.மீட்டர் தூரத்தில் உள்ள 'அன்னப்பன் பேட்டைக்கு' பேப்பர் கூட வராது. இதில் கிராம முன்னேற்றம் அது இது என்று யாராவது பேசினால்... படித்த இளைஞர்களுக்குக் கோபம் வராமல் என்ன செய்யும்?

- கரந்தை, தஞ்சை ப்ரகத்தீஸ்.

### வித்தியாசமான வாழ்த்து

என் பிறந்தநாளுக்கு என் நண்பன் ஒரு வித்தியாசமான வாழ்த்துக் கடிதம் அனுப்பியிருந்தான்.

"நல்ல கொள்கைகளைக் கடைப்பிடிப்பதில் சேஷனைப் போல் பிடிவாதமாகவும்,

சோதனைகள் சூழும் நேரங்களில் நரசிம்மராவைப் போல் பொறுமையாகவும்,

தீயவைகளைக் கண்டால் வீரப்பனைப் போல் மறைந்தும்,

தாயிடம் ஆசி பெறுவதில் முதல்வரை வணங்கும் தமிழக அமைச்சர்கள் போல் பணிவுடனும்,

சிறந்த பண்புகளைப் பெற்று 'ஜெ' கட்-அவுட் போல் உயர்ந்து வாழ எனது வாழ்த்துக்கள்!"

- தஞ்சாவூர், வெ. முருகானந்தம்.

### வோட்டு இல்லாமலே எம்.எல்.ஏ.!

கும்பகோணம் அருகில் உள்ள சுவாமிமலையில் தேர்தல் நடக்காமல் வோட்டுப் போடாமல் ஒருவர் எம்.எல்.ஏ.வாக இருக்கிறார். ஆச்சரியமாக இருக்கிறதல்லவா? வேறொன்றுமில்லை. அவருடைய இனிஷியல் M. அவரது பெயர் லியாகத் அலி! ஆக, M.L.A. வாகிவிட்டார். அவர் M.L.A. டிராவல்ஸ் என்ற பெயரில் டிராவல் ஏஜென்ஸி ஒன்றையும் M.L.A. பிரைமரி ஸ்கூல் என்று ஒரு ஆங்கில தொடக்கப் பள்ளியையும் நடத்தி வருகிறார். சுவாமிமலை முழுவதும் M.L.A. எனக் கேட்டால் அவர்கள் காட்டுவது இந்த M.L.A.வைத்தான்!

சுவாமிமலை, அ. சேட்ஜவகர்,

## டேய்! நானா ரௌடி?

எங்கள் ஊர் ஆவி....!

ஆவி உண்மையோ?

ஆட்டோ சங்கர் ஆவி!

# வட்டமேஜை

♦ எம்.ஜி.ஆர். ஆவி பேசியது என்பது உண்மையோ, பொய்யோ...ஆவி பேசிய வார்த்தைகள் பொய் என்று யாரும் சொல்ல முடியாது!
நாகபட்டினம், மாலதி சுகுமாரன்

♦ மாண்புமிகு தமிழக முதல்வர் டாக்டர் புரட்சித் தலைவியை ஒருமையில் பேசிய குற்றத்திற்காக எம்.ஜி.ஆர். ஆவி மீது வழக்குத் தொடரலாமா என்று சிலர் யோசித்துக் கொண்டிருப்பதாக எங்கள் ஊர் ஆவி ஒன்று சொல்கிறது சார்!
புளியறை, ரமேஷ்கம்பர்

♦ இன்றைய தமிழக முதல்வரை எம்.ஜி.ஆர். அவர்கள் அம்மு என்றுதான் அழைப்பாராமே! ஆவி பேசியதில் எந்த இடத்திலும் அந்த வார்த்தை வரவில்லையே! நம்ப முடியவில்லை. நம்பாமலும் இருக்க முடியவில்லை. அது சரி ஆட்டோ சங்கர் ஆவி, சிவராசன் ஆவிகளையும் அழைத்துப் பேசினால் எந்த புற்றில் எந்த பாம்பு இருந்தது, இருக்கிறது என்றும் தெரிந்துவிடுமே!
ஆங்கரை, பைரவி.

♦ எம்.ஜி.ஆரின் ஆவி(?!)யா? தமிழகத்தில் மாறுவேடத்தில் பவனி வர உமக்கு ஆசை வந்து விட்டதோ?!
வீராக்கியம், டி.மகேஷ்

♦ பக்கத்துக்குப் பக்கம் பயமுறுத்தல்கள்... பயத்துடிபடித்து இதயத் துடிப்பைச் சற்று கூட்டிக் கொள்ள வைத்ததற்கு பயங்கர சத்தமாய் சபாஷ்!
மதுரை-16, எல்.எம்.அபிதாட்சயா

♦ நீண்ட பாரம்பரியமுள்ள 'கல்கி' கூட ஆவி, மீடியம், விக்கிரவாண்டி, UFO ஆவிக் கதைகள் என்று ஒரு வாரத்து இதழை வீணடித்திருப்பது இளைய தலைமுறையினரான எங்களுக்கு மன வருத்தத்தை அளிக்கிறது.
திண்டுக்கல், ஜனனி பார்கவி.

♦ திகில் ஸ்பெஷல் வெளியிட்ட உங்களுக்கு எந்த ஆவியும் அன்பளிப்பு வழங்க வரலாம். ஜாக்கிரதையா இருங்க!
மேலூர், இரா. சுப்ரமணியபாரதி

♦ தலையங்கம் கண்டேன். நியமிக்கப்பட்ட கவர்னர், தேர்ந்தெடுக்கப்பட்ட முதல்வர் மீது நடவடிக்கை எடுப்பது குறித்து என்.டி.ஆர். முன்வைத்த வாதம் மேலோட்டமாகப் பார்த்தால் நியாயமாகத் தோன்றினாலும்– தலையங்கத்தின்படி சற்றே சிந்தித்தால்– அவ்வாதம் எவ்வளவு போலியானது என்பது தெளிவாகிறது. பயன்படுத்தவே கூடாது என்கிற ஒரு அதிகாரத்தை, அரசியல் சட்டத்தை உருவாக்கிய மாமேதைகள் வைப்பானேன் என்று என்னைச் சிந்திக்கத் தூண்டியது.
சென்னை-5, எஸ். கற்பகம்.

♦ 'பாலைவனக் கனவு' கதையல்ல உண்மை. ஒரு சமயம் பேருந்தில் அறிமுகமான கம்ப்யூட்டர் படித்த நண்பருக்கே இந்த வகை அனுபவம் உண்டு.
திருவள்ளூர், எஸ்.என். இலட்சுமிபதி.

♦ கல்கி 7.5.95 இதழில் தராசு பதில்கள் பகுதியில் "சுப்பிரமணியசுவாமி – ஜெயலலிதா சம்பந்தமான பரபரப்பான நடவடிக்கைகள் காரணமாக ஆவின் பால் விலைஉயர்வை எந்த அரசியல் கட்சியுமே கண்டுகொள்ளவில்லை" என்ற கருத்தில் பதில் அளித்திருந்தீர்கள். விலை உயர்வுக்கு மறுநாளே ஈரோட்டில் கூடிய இந்திய கம்யூனிஸ்ட் மார்க்ஸிஸ்ட் கட்சியின் தமிழ் மாநில குழு இந்த விலை உயர்வைக் கண்டித்ததுடன் அச்செய்தி உடனே தீக்கதிரில் வெளியாகி தலையங்கமும் எழுதப்பட்டுள்ளது.
கே.கணேசன், கிளைச் செயலாளர்,
சி.பி.ஐ.எம்., இடுவாய்கிளை, திருப்பூர்.

♦ தமிழக அரசியலில் நடந்து வரும் அநாகரிகமான அத்துமீறல்களைக் கண்டும்கூட திடமாக நடைபோடும் எங்களுக்கு உங்கள் திகில் ஸ்பெஷல் எம்மாத்திரம்?! (இருந்தாலும் சில விஷயங்கள் வயிற்றில் புளியைக் கரைத்தன சார்...!)
இராமேஸ்வரம், எம். முருகேசன்.

♦ 'திகில் ஸ்பெஷல்' படித்தேன். நன்றாக இருந்தது. ஆனால் ஒரு குறை! அமரர் கல்கியின் நாவல்களிலிருந்து சிறிய பகுதிகளைப் பிரசுரம் செய்திருக்கலாம். உதாரணமாக ரசியா பேகம் குளியலறையில் ஒளிந்து இருக்கிற காட்சி (அலை ஓசை) ஆதித்த கரிகாலன் கொலை (பொன்னியின் செல்வன்) இவைகளிலும் இயற்கையான திகில் இருக்கிறதே!
கோவை–38, வாதூலன்

ஆவியின் அன்பளிப்பு! You too Kalki! பயமுறுத்தல்கள்!

You too Kalki! ஆவியின் அன்பளிப்பு! பயமுறுத்தல்கள்!

எங்கள் ஊர் ஆவி....!
ஆட்டோ சங்கர் ஆவி!
ஆவி உண்மையோ?

## வாழ்வுக்கு ஒரு வழிகாட்டும் தலம்

## கொல்லம் ஸ்ரீ உமா மஹேஸ்வரர் கோவில்

மனித வாழ்க்கையில் திருமணம் என்பது மிக முக்கியமானதாக விளங்குகின்றது. திருமணம் செய்து கொண்டு குழந்தை குட்டிகளுடன் வாழ்வதையே சிறந்த தர்மமாக பெரியோர் கூறுகின்றனர். அதனால்தான் ஔவைப் பாட்டியும் இல்லறமல்லது நல்லறமன்று என்று இல்லறத்தைப் போற்றிப் பாடினாள்.

அகஸ்திய மகரிஷிக்கு சிவபெருமான் கயிலாய மலையில் தனக்கும் உமைக்கும் நடந்த திருமணத்தை நிகழ்ச்சிகள் ஒன்று விடாமல் காட்டிய இத்தலங்களே உமாமகேசத் தலங்கள் என்று போற்றப்படுகின்றன. இத் தலங்களில் உமாபரமேஸ்வரர் சிவலிங்கமாக அமையாமல் திருமண மேடையில் திவ்ய தம்பதிகளாகவே எழுந்தருளியுள்ளனர். இத்திருக் கோலத்தைக் கண்டு தரிசிப்பவர்க்கு திருமணத்தை புத்திரபாக்கியமின்மை ஆகியவற்றை நீக்கி சகல சௌபாக்ய மளிப்பதாக அகஸ்தியருக்கு பரமேச்சுவரன் வாக்களித்துள்ளார். ஆதலால் இவற்றைக் கண்ணாரக் கண்டு வணங்குதல் புண்ணியமும் நல்வாழ்க்கையும் தருவதாகும்.

இத்தகைய தலங்களில் ஒன்றே கொல்லம் உமாமகேச்சுவரர் ஆலயமாகும். பரசுராம க்ஷேத்திரமாகிய கேரளத்தில் கொல்லம் நகரில் இக்கோயில் அமைந்துள்ளது. அகஸ்தியர் இங்கு தவம் செய்து வந்ததால் இதற்கு அகஸ்திய கூடம் என்பதுபெயர். இங்கு அவருக்குப் பெருமான் திருமணக் கோலக் காட்சியை அளித்தார் என்று புராணம் கூறும்.



இக் கோயிலில் திருமணத் தடையால் வருந்துவோர்களும், குழந்தைப் பேறு அற்றவர்களும் வந்து வழிபட்டு பல நன்மைகளைப் பெற்றிருக்கிறார்கள். இங்கு செவ்வாய், வெள்ளி ஆகிய நாட்களில் நூற்றுக் கணக்கான பெண்கள் கூடி இராகு கால பூசை செய்யும் காட்சி கண்கொள்ளாக் காட்சியாகும். இப்பூசையில் கலந்து கொள்கின்ற அனைவருக்கும் கோயில் சார்பிலேயே எலுமிச்சம்பழ மூடியினாலான விளக்குகள், அதற்கான எண்ணை, பூக்கள் முதலியன தரப்படுகின்றன.

நெடுந்தொலைவில் இருந்து கோயிலுக்கு வரமுடியாதவர்கள் கோயில் முகவரிக்கு தங்கள் பெயர் கோத்திரம் வயது நட்சத்திரம் முதலியவற்றை கடிதம் மூலம் எழுதி அனுப்பினால் அவர்களுக்காக முறையாகப் பிரார்த்தனை செய்து பிரசாதம் சுவாமி அம்மன் படத்துடன் இலவசமாகவே அனுப்பப்பட்டு வருகின்றது. (ஆலய முகவரி: ஸ்ரீ உமாமகேசுவரர் ஆலயம், மெயின்ரோடு கொல்லம், கேரளா - 690 001)

சிவபெருமான் திருமணக் கோலத்துடன் விளங்கும் இப்படியை நினைப்பதுகூட ஒரு புண்ணியமாகும். நமக்காக மட்டுமின்றி அக்கம் பக்கம் உள்ளவர்களுக்குக் கூட பிரார்த்திக்கலாமே.

பூசை. ச. அருணவசந்தன்

# பணம் பண்ணலாம் வாங்க!

வி. கோபாலன்

## குடும்பத்தை எண்ணுங்கள் இன்ஷூரன்ஸ் பண்ணுங்கள்!

ஓர் உலகப் புகழ் பியானோ கலைஞர் தமது கைவிரல் நகங்களை இன்ஷூர் செய்திருந்ததாகச் சொல்வார்கள். தமது மிகப் பெரிய செல்வமாக அவர் கருதியது அவற்றைத்தானாம். அப்படிப் பார்த்தால் நம் ஊரில் எஸ்.பி.பி. தமது குரலையும், பிரபுதேவா கால்களையும் சச்சின் கைகளையும் இன்ஷூர் செய்துகொள்ளவேண்டும். ''நம் அரசியல்வாதிகளுக்குக் கறுப்பு பணத்தை இன்ஷூர் செய்யும் திட்டம் கூட கொண்டு வரலாம்!'' என்று ஜோக் அடிக்கிறார் சிகாமணி. ஆனால், ஆயுள் இன்ஷூரன்ஸ் பாலிஸியையே நம் நாட்டில் நிறைய பேர் எடுக்காமல் இருக்கிறார்கள்! அதிலும் மாதச் சம்பளமின்றி பிசினஸ் மூலம் சம்பாதிப்பவர்கள் பலர் இன்ஷூரன்ஸ் திட்டம் இருப்பதையே மறந்து போய்விடுவதுண்டு!

உண்மையில் இன்ஷூரன்ஸ் என்பது ஆயுள் காப்பீடு மட்டுமின்றி சிறந்த சேமிப்பு முறையுமாகும். விதவிதமான திட்டங்கள் இருப்பதால் அவரவர் தேவைக்கும் சக்திக்கும் ஏற்ற திட்டத்தை எடுத்துக் கொள்வதில் சிரமம் இருக்காது. இன்ஷூரன்ஸ் ப்ரீமியமாகக் கட்டப்படும் தொகைக்கு இந்திய அரசு வரிச் சலுகை அளிக்கிறது என்பது கூடுதலான ஆதாயம்.

இதோ சில திட்டங்கள்:

**Endowment Assurance Policy :** ஒரு குறிப்பிட்ட கால அளவுக்கு இந்த பாலிஸியை எடுத்துக் கொள்ளலாம். தவணைகளில் ப்ரீமியம் செலுத்த வேண்டும். பாலிஸி முடியும் போது இன்ஷூர் செய்யப்பட்ட தொகையுடன் போனஸ் தொகையும் கிடைக்கும்.

**Money Back Policy :** 12, 15, 20, அல்லது 25 என நான்கு கால கட்டங்களுக்கு இந்த பாலிஸி வழங்குகிறார்கள். ஈட்டுத் தொகையைப் பிரித்து, இரண்டு மூன்று தவணைகளில் நமக்குக் கிடைக்கச் செய்கிறார்கள். உதாரணமாக, 12 வருடத்துக்குப் பாலிஸி எடுத்தால், ஈட்டுத் தொகையில் இருபது சதவிகிதத்தை நான்கு வருடங்களின் முடிவில் தருவார்கள்; மேலும் இருபது சதம் எட்டாண்டுகள் கழித்து கிடைக்கும்; பன்னிரண்டு ஆண்டுகளும் முடிந்த பின், மீதி அறுபது சதவிகிதத் தொகையும் முழுத் தொகைக்கும் ஆன போனஸும் கிடைக்கும்.

இதே திட்டம் Children's Money Back Policy என்ற பெயரில் குழந்தைகளுக்காகவும் இயங்குகிறது. பதினெட்டு வயது வரை ப்ரீமியம் கட்டினால், 18, 20, 22 ஆம் வயதில் மூன்று தவணைகளில் தொகை பிரித்துத் தரப்படும்.

**Double Cover Joint Life Policy :** இதற்கு ஜீவன் சாதி (ஆயுள் முழுதும் துணை) என்று கவிநயத்துடன் ஒரு 'புனை' பெயரும் உண்டு. கணவன்-மனைவி இருவரது ஆயுளையும் ஒரே பாலிஸியினால் இன்ஷூர் செய்யும் திட்டம்.

ஜீவன் மித்ரா : ஆயுள் நண்பன் என்று பொருள். பாலிஸி முடிவதற்கு முன் பாலிஸிதாரர் காலமானால், இன்ஷூர் செய்யப்பட்ட தொகையைப் போல் இரண்டு மடங்குடன் போனஸும் வாரிசுக்குத் தரப்படும். பாலிஸி முடிவுறும் போது பாலிஸிதாரர் இருப்பின் இரட்டிப்புத் தொகை கிடைக்காது. ஆனால் இன்ஷூர் செய்யப்பட்ட தொகையுடன் போனஸ் உண்டு.

வேறு பல திட்டங்கள் பற்றி அறியவும் மேற்படி திட்டங்கள் பற்றி மேலும் தகவல்கள் பெறவும் ஆயுள் இன்ஷூரன்ஸ் ஏஜென்டுகளை அணுகலாம்.

இன்ஷூரன்ஸ் பாலிஸி எடுத்து விட்டால் அது கட்டாயச் சேமிப்பு என்றாகி விடுகிறது. ப்ரீமியம்

"நீங்க புன்னகை ராணியா இருக்கலாம். அதுக்காக பல் செட்டையெல்லாம் இன்ஷூர் பண்ண முடியாது!"

| | | |
|---|---|---|
| ஐம்பதாயிரம் ரூபாய்க்கான பன்னிரண்டு வருட **Money Back Policy** : | வயது | ஓராண்டு ப்ரீமியம் |
| | 26 | ரூ. 4,948 |
| | 35 | ரூ. 5,027 |
| ஒரு லட்சம் ரூபாய்க்கான பதினைந்து வருட **Endowment Assurance Policy** : | வயது | ஓராண்டு ப்ரீமியம் |
| | 26 | ரூ. 6,714 |
| | 35 | ரூ. 6,850 |

(இரண்டு பாலிஸிகளுக்கும் வருடாந்திர போனஸ் உண்டு. போனஸ் தொகை, எல்.ஐ.சியுடைய லாபத்தின் அடிப்படையில் இரண்டாண்டுகளுக்கு ஒரு முறை கணக்கிடப்படுகிறது)

கட்டுவது நடை முறையில் கஷ்டமாக இருந்தாலும் அது சிறந்த சேமிப்புத் திட்டம். குறைந்த வயதில் பாலிஸி எடுப்பதில் தான் ஆதாயம் அதிகம். வயது ஏற ஏற ப்ரீமியம் தொகை ஏறிக்கொண்டே போகும். (மேலே உள்ள பெட்டிச் செய்தியில் சில உதாரணங்கள்.) எனவே 'வாழ்க்கையில் 'செட்டில்' ஆன பிறகு இன்ஷூரன்ஸ் பற்றி யோசிக்கலாம் என்று ஒத்திப் போடாமல் சம் பாதிக்க ஆரம்பித்ததுமே ஏதாவது ஒரு பாலிஸி எடுத்துவிடலாம். ஒரு வருடத்தில் எவ்வளவு பணத்தை இன்ஷூரன்ஸுக்கு ஒதுக்க முடியும் என்று தீர்மானித்து, அந்தத் தொகைக்கு அதிகபட்ச ஈட்டுத் தொகை தரக்கூடிய பாலிஸியாகத் தேர்வு செய்ய வேண்டும். வாழ்க்கையில் முன்னேறி, வரு மானம் கூடிய பிறகு, அதிக ப்ரீமியம் உள்ள வேறொரு பாலிஸி கூட எடுக்கலாம்.

'ஆமாம்! நாமே போய்ச் சேர்ந்த பிறகு பணம் வந்து என்ன பயன்!' என்று நினைப்பதற்கும் இட மில்லாமல் அவ்வப்போது பணம் கிடைக்கச் செய் யும் திட்டங்கள் உள்ளன.

மேலும், இன்ஷூரன்ஸ் பாலிஸியைக் கூடுதல் அச்சாரமாகக் (collateral security) கொடுத்து வங்கி அல்லது நிதி நிறுவனக் கடன் வாங்க முடியும். எல்.ஐ.சி. பாலிசிதாரராக இருப்பவர்களுக்கு அந்த அமைப்பிடமிருந்து வீடு கட்ட கடன் பெறுவது அனுகூலமாக இருக்கும்.

(பணம் பெருகும்)

# CITY FINANCE (REGD)

293, Royapettah High Road, Royapettah, Madras - 600014.
Ph : 8267537

# 100%

# SAFETY & SECURITY

- Interest is paid every month.
- One month interest is paid in advance.
- Your money more than doubles in 39 months

# 22% INTEREST

GROW WITH CITY FINANCE

# கே. பாலசந்தர் 43

IF YOU WISH TO MAKE A MAN YOUR ENEMY TELL HIM SIMPLY "YOU ARE WRONG."

சென்ற வாரம் எனது மனச்சாட்சி எனக்கெழுதிய பகிரங்கக் கடிதத்திற்கு நான் பதில் சொல்லியே ஆக வேண்டுமென்று முதலில் நான் நினைத்ததென்னவோ உண்மைதான். இரண்டு வழிகளில் அந்தக் கடிதத்திற்குப் பதில் சொல்லலாம்.

எப்படி எப்படி எந்தெந்தக் காரணங்களினால் compromise பண்ணிக் கொள்ள வேண்டி வந்தது என்று விலாவாரியாக எழுதித் தீர்ப்பது ஒன்று!

அந்தக் கடிதத்தையே கண்டு கொள்ளாமல் விட்டுவிடுவது மற்றொன்று!

இரண்டாவது வழிதான் சிறந்ததாக எனக்குப்பட்டது.

I don't want to say, "you are wrong" to my conscience.

எனது மனசாட்சியோ, மறுபக்கமோ நான் அதை விரோ இத்துக் கொள்ள விரும்பவில்லை; தொடர்ந்து நண்பனாகவே இருக்க விரும்புகிறேன்.

மற்றவர்களுக்கு மத்தியில் உன்னைப் பற்றியே நீ பேசிக் கொண்டிருக்காதே; நீ அங்கிருந்து நகர்ந்தவுடன் அங்கே அதுதான் நடக்கப் போகிறது - இது ஒரு முதுமொழி!

ரசிகப் பெருமக்கள் தன்னைப் பின் தொடர்ந்து வருகிறார்களா அல்லது துரத்திக் கொண்டு வருகிறார்களா என்பதை மட்டும் புரிந்து கொள்ள முடியாத நிலைதான் எந்தத் திரைப் படக் கலைஞனுக்கும்; ஏன்? எந்தக் கலைஞனுக்குமேதான்.

ரசிகர்கள் ஒன்றிரண்டு சந்தர்ப்பங்களில் பின் தொடர்ந்து பார்க்கிறார்கள்; பின்னர் அவனைத் துரத்துகிறார்கள்; ஓட ஓட விரட்டுகிறார்கள். இதை அவன் புரிந்து கொண்டால் சரி! அதை விட்டுவிட்டு ஆஹா எவ்வளவு பெரிய fan following நமக்கு என்று இறுமாந்திருப்பது நல்லதல்ல.

நீ ரசிகனை ஏமாற்றுகிறாய் என்கிற உண்மை அவனுக்குத் தெரியும்போது அவன் சுதாரித்துக் கொள்கிறான்; உனக்குப் பின்னால் வரும் அடுத்த கலைஞனை அவன் பற்றிக் கொள்கிறான்.

He changes loyalties.

Sex appeal என்பது பற்றி Sophia Loren என்கிற பிரபல ஹாலிவுட் நடிகை மிக அழகாகச் சொன்னார்:

"ஐம்பது சதவிகிதம் உன்னிடம் இருப்பது; மீதி ஐம்பது சதவிகிதம் உன்னிடம் இருப்பதாக மற்றவர்களை நம்பவைப்பது."

அதே போலத்தான் உனது திறமையும்! உனது திறமை ஐம்பது சதவிகிதம் இருக்கலாம்; ஆனால் மீதி ஐம்பது சதவிகிதம் திறமையும் உன்னிடம் இருப்பதாகத் தொடர்ந்து நம்ப வைப்பதுதான் உனது சாமர்த்தியம்.

டெலிவிஷன் வந்த புதிதில் உலகெங்கிலுமுள்ள திரைப்படத்துறையினரும் நாடகத் துறையினரும் பெரும் அதிர்ச்சிக்குள்ளானார்கள். மக்களின் வரவேற்பறைக்குள்ளேயே ஊடுருவிச் சென்று, பொழுதுபோக்கு அபிமானிகளை அங்கேயே உட்கார்த்திவைத்து திரையரங்குகளுக்கும் நாடக அரங்குகளுக்கும் அவர்களை வரவிடாமல் செய்த ஒரு விஞ்ஞான முன்னேற்றம் இது.

திரைப்படத் துறையினரை ஆழ்ந்த கவலைக்குள்ளாக்கியது. திரைப்படத் துறைக்குச் சாவு மணி அடிக்கப்பட்டு விட்டதாகக் கூக்குரல்களும் பலத்த எதிர்ப்புகளும் அமெரிக்காவிலே எழுந்தன.

இந்த விஞ்ஞான வளர்ச்சியைச் சிலர் எதிர்த்தனர். இதில் என்ன நியாயம் இருக்கிறது?

விஞ்ஞானம், தனி மனித மகிழ்ச்சியையும் நிரந்தரமான மன அமைதியையும் என்றைக்குமே வாக்குறுதிகளாகத் தந்ததில்லை.

Science promises only truth.

எப்படி விஞ்ஞானத்தைத் தனக்குச் சாதகமாக ஆக்கிக் கொண்டு அதையே மக்களுக்குப் பயன்படுத்திக் கொள்ள முடியும் என்று சிந்திப்பதில்தான் மனிதனின் ஆக்க பூர்வமான புத்திசாலித்தனம் அடங்கிக் கிடக்கிறது.

ஆகவே டெலிவிஷன் என்பது தவிர்க்க முடியாத ஒரு விஞ்ஞான வளர்ச்சியென்று மெல்ல மெல்லத் திரைப்படத் துறையினர் உணர்ந்துகொண்டு அந்தப் புதிய விஞ்ஞான வடிவத்துடன் எப்படியெல்லாம் சமாதான முறையில் co-exist பண்ண முடியும் என்று

நினைவலைகள்

சிந்தித்துச் செயல்படத் தொடங்கினார்கள்.

முன்பெல்லாம் திரைப்படக் கலையைத் தான் கலைவடிவங்களின் வரிசையில், கடைசியாக இடம் பெறுகின்ற கலை, (lowest form of art) என்று கருதினார்கள்.

அதற்கும் கீழே இன்னொரு கலை வடிவமாக இந்த டெலிவிஷன் வந்தது.

"திரைப்படக் கலைக்குக் கூடுதல் ஸ்தானத்தைக் கொடுத்து, அதற்கு ஒரு சின்ன மரியாதையையும் ஏற்படுத்திக் கொடுத்த வகையில் டெலிவிஷன் வந்தது குறித்து எங்களுக்குச் சந்தோஷம்தான்" என்று Billy Wilder என்கிற பிரபல ஹாலிவுட் திரைப்பட இயக்குனர் சொன்னார்.

"டெலிவிஷன் என்பது 21 அங்குலச் சிறை; அதனால் திரைப்படக் கலையோடு போட்டி போட இயலாது" என்றும் அவரே கூறினார்.

டெலிவிஷன் ஆக்கிரமிப்பு வந்த பிறகு இப்படித்தான் சமாதானம் சொல்லிக்கொள்ள வேண்டிய நிலை திரைப்படத் துறையினருக்கு ஏற்பட்டது. உலகம் போற்றுகின்ற ஹாலிவுட் திரைப்பட நிறுவனமாகிய MGM முதலாளி Samuel Goldwyn வேடிக்கையாகச் சொன்னார்:

"வீட்டிற்குள்ளேயே இருந்து கொண்டு, காசே கொடுக்காமல், மோசமான நிகழ்ச்சிகளை மக்கள் பார்க்கின்ற வாய்ப்பை டெலிவிஷன் தரும்போது, வீட்டைவிட்டு வெளியே சென்று காசு கொடுத்து ஏன் மோசமான திரைப்படங்களை மக்கள் பார்க்க வேண்டும்?"

இன்னொருவர் சொன்னார், (சொன்னவர் பெயர் நினைவில்லை): "டெலிவிஷன் எனக்கு நல்ல கல்வி அறிவைக் கொடுக்கிறது. ஒவ்வொரு முறை டெலிவிஷனை வீட்டில் யாராவது போடும் போதும் நான் எனது அறைக்குச் சென்று கதவைத் தாளிட்டுக் கொண்டு ஒரு புத்தகம் படிக்க ஆரம்பித்து விடுகிறேன். ஆகவே டெலிவிஷனுக்கு எனது நன்றி."

இப்படியெல்லாம் கிண்டலும் கேலியுமாகப் பேச முடிந்ததே தவிர டெலிவிஷனின் பூதாகார வளர்ச்சியையும், பார்வையாளர்களின் மத்தியில் டெலிவிஷன் எடுத்த விசுவரூபத்தையும் யாராலும் எதுவும் செய்ய முடியவில்லை.

என்னைப் போன்றவர்களுக்கு அதாவது திரைத் துறையைச் சேர்ந்தவர்களுக்கு டீ.வி.யில் ஒரு திரைப்படத்தைப் பார்ப்பது சௌகர்யம்தான். தியேட்டரில் படம் பார்க்கப் போகிறேன் என்றால் படம் எவ்வளவு இழுவையாக இருந்தாலும் கடைசிவரைக்கும் உட்கார்ந்து பார்க்க வேண்டிய ஒரு கட்டாயம் இருக்கிறது. படத்தின் பாதியிலேயே எழுந்து போனால் அது prominent ஆக எல்லோரது கவனத்தையும் ஈர்க்கிறது. அந்த குறிப்பிட்ட படத்தின் தயாரிப்பாளர், இயக்குநர் இவர்கள் வரை நான் திரைப்படத்தின் பாதியிலேயே எழுந்து சென்றுவிட்ட செய்தி எட்டுகிறது. எனது செய்கை அவர்களது மனத்தை நோகச் செய்கிறது.

இப்படித்தான் ஒரு முறை ஒரு புதிய படம், ஒரு பழம்பெரும் டைரக்டர் இயக்கி வெளியான போது நான் தியேட்டரில் படம் பார்த்துக் கொண்டிருந்தேன். படம் போரடிக்கவே ரசிகர்களும் கூச்சல் போட்டுக் கொண்டிருந்தார்கள். படத்திலே கவனம் செலுத்த முடியாதபடி இந்தக் கூச்சலும், கமென்டுகளும், கேலியான கைதட்டல்களும் தொடர்ந்து இருக்க.... நான் பாதியில் தியேட்டரை விட்டு எழுந்து வந்து விட்டேன்.

ஆனால் இதே விஷயம் ஒரு பத்திரிகையில் 'இசு

கெ'வாக வெளி வந்தது...

'பாதி படத்திலே பாலசந்தர் எழுந்து சென்று விட்டார்' என்று போட்டிருந்தாலும் பரவாயில்லை.

"போர் தாங்காமல் பாதி படத்தில் பால சந்தர் வெறுப்புடன் வெளியேறி விட்டார்" என்று அவர்களுடைய கற்பனை வார்த்தை களையும் சேர்த்து எழுதி விட்டதன் விளைவு, அந்தப் படத்தின் இயக்குநரிட மிருந்து ஒரு காரசாரமான கடிதம் எனக்கு வந்தது.

நான் என்ன பதில் சொல்லியும் அந்த இயக்குநர் சமாதானம் ஆகவில்லை.

இந்தச் சம்பவத்திற்குப் பிறகு நான் அதிக மாக தியேட்டர் போய் தமிழ்ப் படம் பார்ப் பதில்லை.

அப்படியே பார்க்க வேண்டி வந்தாலும்

அடுத்த இதழில்....



**"என் உடன் பிறவா சகோதரி...."**

**— கவர் ஸ்டோரி!**

தியேட்டர் உரிமையாளர்களுக்கு போன் செய்து 'box' இருந்தால் அங்கே சென்று சப்த மின்றிப் படம் பார்த்துவிட்டு வந்து விடு வேன். அப்படி அந்த தியேட்டரில் box வசதி இல்லையென்றாலோ, ரசிகர்களின் மத்தியி லேதான் அமர்ந்து படம் பார்க்க வேண்டு மென்கிற கட்டாயம் வந்தாலோ ஒரு சின்ன பெருமூச்சு விடுவதைக் கூடத் தவிர்த்து விடுவேன்.... 'பாலசந்தர் restless ஆக இருந் தார்' என்று யாரும் சொல்லிவிடக் கூடாதே என்பதற்காக, இருக்கையில் ஆணி அடித் தாற்போல் அமர்ந்து கொண்டு கால் மாற்றிக் கால் போடுவதைக் கூடத் தவிர்த்து விட்டு ஆடாமல் அசையாமல் படம் முழுவதும் பார்த்துவிட்டு வருவேன்!

இப்படிப்பட்ட இக்கட்டான நிலை களைத் தவிர்க்க 'remote' நம் கையில் இருப் பது எவ்வளவு பெரிய அனுகூலம்?

பிடிக்காத எந்தக் காட்சியையும் 'சரசர' வென fast forward செய்து இரண்டரை மணி நேர திரைப்படத்தை ஒன்னேகால் மணி நேரத்திற்குள் பார்த்து முடித்து விடுகிற அனு கூலம் எங்களைப் பொறுத்தமட்டில் எத் தனை பெரிய விஞ்ஞான அனுகூலம்!

ஆனால் ரசிகர்களும் தியேட்டர் பக்கமே போகாமல் இப்படியே இரண்டரை மணி நேர திரைப்படத்தை ஒன்றேகால் மணி நேரத்திற்குள் வரவேற்பறையிலேயே பார்த்து விடுவதுதான் திரைப்படத் துறையைப் பிடித் திருக்கும் ஒரு கொடிய நோய்.... cancer... அதிலும் latest satellite யுகம் திரைத்துறையின் மிகப் பெரிய எதிரி.

பொன்முட்டையிடும் வாத்தைக் கொல் கின்ற ஒரு அதிரடி முயற்சி. சினிமா செத்து விட்டால் பின்னால் புதுப்பது சினிமாக்கள், சினிமா வழி வந்த நிகழ்ச்சிகள், பாடல் காட்சிகள் இவையெல்லாம் எப்படி கிடைக்கப் போகிறது இவர்களுக்கு?

ஆனால் ஏன் திரைப்படத் துறையினர் இப்போது டெலிவிஷன் மீடியத்திற்குப் படையெடுக்கிறார்கள்? நீங்கள் கேட்பது எனக்குப் புரிகிறது.

1. சிலருக்குக் கலையார்வம், 2. பலருக்கு survival ஒரு முக்கிய காரணம், 3. இன்னும் சிலருக்கு : The ultimate is only television. So, better early than late.

விளம்பரங்களோடு வருகிற டி.வி. நிகழ்ச்சிகளையும், திரைப்படங்களையும் மக்களால் எப்படி பொறுமையாகப் பார்க்க முடிகிறது என்று நான் சில சமயம் நினைப் பேன்.

விளம்பரங்களையும் பார்ப்பது என் பது இப்பொழுது அநேகமாக எல்லோருக் கும் பழக்கமாகிவிட்டது.

சில நேரங்களில் திரைப்படக் காட்சி களைவிட விளம்பரங்களில் வரும் கண்கவர் வண்ணங்களும் 'ஷாட்'டுகளும் குழந்தை களின் மனத்தைக் கவ்வுகின்றன.

They don't mind seeing it.

முப்பது நிமிட டெலிவிஷன் நிகழ்ச்சி களில் முதல் பதினான்கு நிமிடமும், கடைசி பதினான்கு நிமிடமும்தானே விளம்பரம் வருகிறது என்று மகிழ்ச்சிப் பெருக்கோடு சொல்லிக் கொள்ளும் நிலையில் இன்று இருக்கிறோம்.

(தொடரும்)

சத்யம் சீலம் நாணயம் தர்மம் = இதுதான் சசிநாத் சத்யம் சீலம் நாணயம் தர்மம் = இதுதான் சசிநாத்

**திருமாங்கல்ய திருமண திட்டம்**

உங்கள் பெண், ஆண்
குழந்தைகளை படிக்க வைக்க
திருமணம் முடிக்க கவலை
கொள்ள வேண்டாம்.

இதோ ஒரு அருமையான திட்டம்!

**ஒரே ஒரு முறை மட்டும்**

*சிறிய முதலீடு! பெரிய வருமானம்!!*

| வயது | தாங்கள் செலுத்தும் தொகை | டெப்பாசிட் செய்யும் மாதங்கள் | தங்களுக்கு கிடைக்கும் தொகை |
|---|---|---|---|
| 1 வயது | ரூ.1,000/- | 240 | 64,000 |
| 1 வயது | ரூ.2,500/- | 240 | 1,60,000 |
| 1 வயது | ரூ.5,000/- | 240 | 3,20,000 |
| 5 வயது | ரூ.15,000/- | 180 | 3,60,000 |
| 10 வயது | ரூ.45,000/- | 120 | 3,60,000 |

SOORYA ADVERTISINGS

# டெபாசிட் சேகரிப்பு விழா

உடனடி வட்டி!

ரூ.10,000/-மும் அதற்கு மேலும் 1 ஆண்டுக்கு டெப்பாசிட் செய்து 1 ஆண்டு வட்டி உடனடியாக பெறுவீர். **18% P.A.**

இன்று உங்கள் பணத்தை முதலீடு செய்து **இரு மடங்காக** 40 மாதங்களில் பெறுவீர்

ரூ.5000/-மும் அதற்கு மேலும் 1 ஆண்டுக்கும் அதற்கு மேலும் டெப்பாசிட் செய்து 6 மாத வட்டி உடனடியாக ரொக்கமாக பெறுவீர். **20% P.A.**

**ரூ.50,000/-** 60 மாதங்கள் முடிந்தவுடன் **1,50,000/-** பெறுங்கள் போனஸ் தனி



## சசிநாத் சாஸ்வத நிதி லிமிடெட்

H.O. 36, [illegible] தெரு, சென்னை - 17 PH: 4348233, 4346786
B.O. 35, M.C. ரோடு, சென்னை - 21, 201, N.M. ரோடு, ஆவடி, சென்னை - 54.
34-C, [illegible] ரோடு, காஞ்சிபுரம் - 631 501. 56, [illegible] ரோடு,
திருத்தணி - 631 209, 38, ஆற்காடு சாலை, வேலூர் - 632 004.
பாண்டி கிளை : 161, S.V. படேல் தெரு, பாண்டி - 605 001.

[illegible] பங்குதாரர்களுக்கு மட்டும் செவ்வாய் விடுமுறை

**மக்கள் சேவையில் 17 ஆம் ஆண்டு**

சசிநாத்துடன் இணைவோம்! சௌக்கியமாக வாழ்வோம்

சத்யம் சீலம் நாணயம் தர்மம் = இதுதான் சசிநாத் சத்யம் சீலம் நாணயம் தர்மம் = இதுதான் சசிநாத்



# அதிக முடி உதிர்வா?

புதிய

உபயோகியுங்கள்

# ERRICA

NATURAL MEDICINAL PLANT HAIR TONIC

## எரிகா

புதிய ஆராய்ச்சியில் உருவான
ஆயுர்வேத ஹேர்டானிக்.

- அதிக முடி உதிர்வை தடுக்கிறது.
- அடர்த்தி முடி வளர தூண்டுகிறது.
- இள வயது வழுக்கையை தடுக்கிறது.
- பொடுகை எதிர்க்கிறது.
- இளநரையை திடுக்கிறது.

தூய தேங்காய் எண்ணையில் தயாரிக்கப்பட்டது







டாக்டரால் பரிந்துரைக்கப்படுகிறது

Available at leading
medical shops/general stores
AVAILABLE AT SELECT TOWNS ONLY




a research quality product from MEDICINAL PLANTS RESEARCH DIVISION

Mfrs.: DALE CARE
15, III CROSS STREET
BRINDAVAN,
PONDICHERRY 13

➤ NOW AVAILABLE IN MADRAS CITY AND ALLOVER TAMILNADU. ◄

LEEVI

# நீங்கள் கேட்டவை


• திமுகவுக்கு பலம்?


• ஹச்! ஹச்!

● கே. சஞ்சீவி பாரதி, அவ்வையார் பாளையம்.

? டி.ஆர். சேர்த்துக் கொண்டதால் தி.மு.க.வுக்குப் பலமாகி விட்டதா?

! ஒரு வேளை மறுபடியும் டி.ஆர். படங்கள் நன்றாக ஓட ஆரம்பிக்கலாம்!

● மு.இரவிச்சந்திரன், சேலம்.

? உண்மையான நட்புக்கு இன்று யாரை உதாரணம் காட்டலாம்?

! அம்மம்மா! இதென்ன கேள்வி!

● டி.எஸ்.டி.ராயன், சென்னை.

? பம்பாய் தமிழில் எதிர்பார்த்த அளவு ஓடாம விருப்பது குறித்து?

! யார் சொன்னது? அட்வான்ஸ் புக்கிங்குக்கு அனுப்பி மூணு தடவை கை விரிச்சு வந்தாச்சு.

மீறலில்தானே அனுசரிக்கப்படுகின்றன! கேட்டா, சம்பளம் பத்தாதுன்னு சொல்வாங்க.

● தாரகை, இராதாபுரம்

? 'அயோக்கியர்களின் கடைசி புகலிடம் அரசியல்' என்று பெர்னார்ட் ஷா கூறியிருக்கிறாரே?

! அவர் பிரிட்டனில் வாழ்ந்தவர்; அதனால் அப்படிச் சொன்னார். இந்தியாவில் பிறந்து வளர்ந்திருந்தால் 'அயோக்கியர்களின் முதல் புகலிடம் அரசியல்' என்று கூறியிருப்பார்!

● எஸ்.கே. மூர்த்தி, கும்பகோணம்.

? ஊழல் குற்றச்சாட்டுகளுக்குப் பதவி விலகல்தான் பரிகாரமா?

! ஊழல் நடந்திருப்பதாக நீதிமன்றத்தில் நிரூபிப்பதுதான் ரொம்பக் கஷ்டம். ஊழல் ஏதும் நடக்கவில்லை என்று குற்றம் சுமத்தப்பட்டவர் நிரூபிப்பது மிக, மிக, மிக எளிது. அதைச் செய்யாத போதுதான் 'பதவி விலகு' என்ற கோஷம் எழுகிறது.

● மா. பழனிசாமி, கோவை.

? 'தடா சட்டத்தை ரத்து செய்யாவிட்டால்




● மனோகர் இன்பராஜ், திருச்சி.

? சென்னைக்கு வந்த ஐஸ்வர்யா ராயினால் தங்களுக்கு ஒன்றும் பாதிப்பு இல்லையே?

! ஹச்! ஹச்!

● ஸ்ரீவித்யா காளிதாஸ், சிதம்பரம்.

? 'அரசு அலுவலகங்களில் சாமி படங்களை அகற்றக் கோரி போராட்டம்' என வீரமணி அறிவித்துள்ளது பற்றி...?

! அன்னை ஆதிபராசக்தி படத்துக்கு மட்டும் விதிவிலக்கு!

● ஜோ.ஜெயக்குமார், நாட்டரசன்கோட்டை.

? மணிரத்னம், குஷ்பு, ரகுமானுக்கு கலைமாமணி விருது கிடைத்துள்ளதே?

! பாரத ரத்னாவுக்கே மதிப்பில்லாம போச்சு; இது என்னங்க, கும்பலோட கோவிந்தா!

● ஆர். ராஜதுரை, சீர்காழி.

? அரசு டாக்டர்கள் தனியாகத் தொழில் செய்யக் கூடாது என்று கர்நாடக அரசு முடிவு செய்துள்ளதே?

! அரசு ஆசிரியர்களும் டியூஷன் சொல்லித் தரக் கூடாதுதான். நல்ல சட்டங்கள்தான்.

ரால் மந்திரி சபையைக் கவிழ்ப்பேன்' என்கிறாரே ஜாபர் ஷெரீப்?

! அவர் முதலில் ரயில்கள் கவிழாமல் கவனித்துக் கொள்ளட்டும். அதை விட்டு விட்டு சம்பந்தமில்லாமல், 'தடா சட்டம் ரத்து', 'பாகிஸ்தான் மீது போர் தொடுப்போம்' என்று ஆவேசப் பேச்சுகளில் இறங்கி... கடைசியில் பிரதமரால் குட்டப்பட்டு உட்கார்ந்திருக்கிறார்.

● சோ. க. மணிவேலா, சோமரசம்பேட்டை.

? 'இலங்கை ராணுவத்தினரைக் காப்பாற்ற நமது ராணுவத்தை அனுப்ப வேண்டும்'


• புதிய போராட்டம்!


• இங்கு பிறந்திருந்தால்

என்கிறாரே, சு.சுவாமி? சரியா?

! இப்போதைக்குக் கடற்கரைப் பகுதிகளைக் கண்காணிக்க இந்தியக் கடற்படைக்கு ஆணை பிறப்பிக்கப்பட்டுள்ளவரை சரி. இலங்கைக் கடற்கரைக்கும் இந்தியக் கடலோரப் பகுதிக்கும் அதிக வித்தியாசம்– இடைவெளி இல்லை. அதனால் சட்டத் துக்குப் புறம்பான ராணுவத் தளவாட நட மாட்டங்களை நாம் தடுப்பது அவசியமே; நியாயமும் கூட.

● என். ஆர். சுப்பிரமணியம், பூனாம்பாளையம்.

? சிறந்த கேள்விக்கு ரூ. 25 பரிசு தர ஆரம்பித்த போது விலைவாசி எப்படி இருந்தது... இப்போ எப்படி இருக்கு... யோசித்தீர்களா?

! சரிதான் போங்க; கிராக்கிப்படி, கிராஜு விடி, லீடி அலவன்ஸ் என்று கோரிக் கைகளை அடுக்குவீர்கள் போலிருக்கே? நாங்கள் தருவது சம்பளம் இல்லை சுவாமி, சன்மானம்.

● எச். மோகன், மன்னார்குடி

? சமீபத்தில் அரசியல் வட்டாரச் செய்திகளில் உங்களை மிகவும் கவர்ந்தது...?

! கிரன்பேடி 'கைதிகளுக்குச் சலுகை காட்டி கெடுத்து விட்டார்' என்றும் இன்னும் பல குற்றங்களையும் சுமத்தி, ''விசாரணை வேண்டும்'' என்ற கோரிக்கையுடன் அவ ருக்கு மாற்றல் உத்தரவு பிறப்பிக்கப்பட் டிருப்பதுதான். நற்பணிகள் ஆற்றி, உலகப் புகழும் மாபெரும் விருதும் பெற்றுள்ள ஒருவரைப் பிறரது பொறாமை எப்படி யெல்லாம் ஆட்டிப் படைக்கிறது! அயோக் கியர்களே மிகுந்த இந்திய அரசியலில், யோக்கியருக்கே இட மில்லை போலும்! கிரன் பேடி, ''விசாரணையை வரவேற்கிறேன்; ஒத் துழைக்கத் தயார்'' என்று கூறியிருப்பதை கும்ப கோணம் எஸ்.கே. மூர்த்தி யின் கவனத்துக்குச் சமர்ப்பிக்கிறேன். மடியில் கனமிருந்தால் தானே வழியில் பயம்!

● என் பிரபாகரன், திருமண்டங்குடி.

? உச்சநீதி மன்றத்தில் ஜெ. இடைக்காலத் தடை பெற்று விட் டாரே?

! வழக்கு முற்றுப் பெற்று தீர்ப்பு வருமுன் விமர் சிப்பது முறையல்ல. ஒன்று கூறலாம். நீதி நிலைத்தால் மட்டும் போதாது. நீதி வழங்கப் பட்டதாக மக்கள் நம்பும் படியும் இருக்க வேண் டும் என்று வசனம் உண்டு. அதனால்தான் நீதிபதிகள் இருதரப்பு வாதங்களையும் விரி வாகக் கேட்டுக் கொண்டு நிதானமாக முடிவுக்கு வருகிறார்கள். எனவே தாமதங்கள் தவிர்க்க முடியாதவை.

● ஆர். பாஸ்கரன், பவித்திரமாணிக்கம்.

? தடா தேவையா?

! தேவைதான்; ஆனால் அது துஷ்பிரயோக மாவது தேவையில்லை. அதனால் அதைப் புதுப்பிக்காமல், புதிய வடிவம் தந்து, புதிய சட்டமாக நிறைவேற்ற ராவ் அரசு தீர்மானித்துள்ளது.

## காலத் தடை பெற்று விட்டாரே?





• திட்டப்பட்டார்!



• 'ராணுவம் அனுப்பு!'



• பிறரது பொறாமை!

□ ரூ 25 பரிசு பெறுபவர்:
எஸ்.கே.மூர்த்தி,
49, ராமசாமி சன்னதி,
கும்பகோணம் - 612 001

## குமுறல்



# பிரேமானந்தா வேடத்தில்...

●● "நூலகம் பூட்டிக்கிடக்கு!" - இது தான் எங்கள் ஊர் நூலகத்தின் நிலை. மாதத்தில் பாதி நாள் பூட்டிக் கிடக்கக் காரணம், நூலகர் பற்றாக் குறைதான். எங்கள் ஊர் நூலகர்தான் நரிக் குடிக்கும் நூலகர். வீர சோழனுக்கும் அவர்தான்! உதவியாளர் கிடையாது. இப் போது ஆயுள் சந்தா அதிகரிக்கப்பட்டி ருப்பதுடன் ஆண்டுச் சந்தாவும் வாங்கப் படுகிறது. நூலகர்களுக்குப் புரவலர்கள் தேடும் நிர்ப்பந்தம் வேறு! கட் -அவுட், மலர்ப்பாதை, தனி விமானம் என்று செல விடுவோர் நடுத்தர, ஏழை மக்கள் தங்கள் அறிவைப் பெருக்கிக் கொள்ள உதவும் நூலகங்களுக்குச் செலவிடக் கூடாதா?

திருச்சுழி, சுந்தர் அழகேசன்.

●● திருநெல்வேலி ஜங்ஷன் பேருந்து நிலையத்தில் பயணிகள் அமர்வதற்குரிய இருக்கைகளை பீடா, சிகரெட், சர்பத் கடைக்காரர்கள் மாமூல் கொடுத்து ஆக் கிரமித்துவிட்டது பழைய செய்தி. ஆனால் தற்போது பயணிகள் நிற்குமிடத்திலும் ஆறு டீ ஸ்டால்கள் தோன்றியுள்ளன. அனைத்தும் ஆளும் கட்சிக்காரர்களுடை யது. டீ கடைகளின் பெயர்கள் கூட ஜெ.ஜெ. என்றிருக்கிறது! பயணிகள் நிற் பதற்குக் கூட இடமில்லாமல் சிரமப்படு கிறார்கள். இந்த அக்கிரமத்தை யார் தட்டிக் கேட்கப் போகிறார்கள்?

திருநெல்வேலி, எஸ்.முகம்மது யூசுப்

●● சமீபத்தில் சென்னை மடிப்பாக்கத்தில் உள்ள பள்ளி ஒன்றின் ஆண்டு விழாவிற் குச் சென்றிருந்தேன். மாறுவேடப் போட்டி யில் இரண்டு, மூன்று மாணவர்கள் பிரேமானந்தா போல வேடம் போட்டுக் கொண்டு வந்திருந்ததைப் பார்த்த போது மனத்துக்குக் கஷ்டமாயிருந்தது. ஒரு நேரு, காந்தி போன்ற தலைவர்களைப் போல் வேடம் போட்டுக் கொண்டாலும் பாராட் டலாம். இது போன்ற அயோக்கியர்களின் வேடத்தைப் பள்ளி நிர்வாகிகளும், குழந்தைகளின் பெற்றோரும் ஊக்குவித்தது கண்டிக்கத் தக்கது.

சென்னை-91, சரஸ்வதி மைந்தன்

●● வைகை எக்ஸ்பிரஸுக்கு சாதாரண வகுப்பில் டிக்கெட் எடுத்து, எழும்பூர் நிலையத்தில் நுழைந்தால், பயணிகளுக்கு முன்னதாகவே போர்ட்டர்கள் இருக்கை களில் அமர்ந்து கொண்டு நபர் ஒன்றுக்கு 20 ரூ., 30 ரூ. என்று கொடுத்தால்தான் 'இடம் தருவோம்' என்கிறார்கள். ரயில்வே நிர்வாகம் நடவடிக்கை எடுக்குமா?

பெருஞ்சேரி, என். முருகேஷ்.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி, பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் : ரூ. 525/-.

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka